உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருவாலவாயென்னும்

# மதுரைத் தேவாரத்

# திருப்பதிகங்கள்.

## ஈழநாட்டுப்பதிகங்கள்.





இவை

யாழ்ப்பாணம்

பிரபலவர்த்தகர்

(பிரம்படி)

ம. ா. ா. ஸ்ரீ சு. வே.

**வல்லிபுரம்பிள்ளை அவர்களது**

பாரியார்

சௌபாக்கியவதி

**சின்னாச்சிப்பிள்ளையின்**

ஞாபகமாக

மேற்படியார்களின் புத்திரன்

சோமசுந்தரனால்

கோக்குவில் சோதிடப்பிரகாசயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டன.

---

சுக்கில௵ தைமீ.

திருச்சிற்றம்பலம்.

பொருப்பைப் பண்பொடுங் குனித்துச் சண்டவெம்
புரத்தைப் பொன்றமுன் சிரித்துக் கண்டவன்
கரப்பொற் குன்றடுந் திறத்துச் சிங்கமென்
கருத்துட் டங்குமஞ் செழுத்துஞ் சம்புவண்
டரக்குக் கொண்பதஞ் சலிக்குத் தென்றலந்
தழைப்பத் தொந்தொமென் றிசைத்துச் சந்தகந்
திருத்தச் செம்பதம் புரிப்பித் தன்புறுந்
திருச்சிற் றம்பலம் திருச்சிற் றம்பலம்.

முன்மலர்நான்முகன்றிருமான் முனிவர்புரந்தரன்றேவர்
நன்மறைகண்டடிபரவ நலமலிகாலங்கடொறுந்
தொன்மடமாதுடனயந்து சுந்தரனன்னடமாடுந்
தென்மதுரைமாநகர்சேர் திருச்சிற்றம்பலம்போற்றி.

தமிழ்நாடுசெய்த தவப்பயனால் சமண பௌத்தர்களின் பொய்ம்மைநெறிகளைப் போக்கிச் சைவத்தைப் போற்றத் திருவவதாரஞ்செய்த திருவருட்செல்வராம் ஆளுடையபிள்ளையார் முதலிய சைவசமய ஸ்தாபனாசாரியர்கள் திருவாய்மலர்ந்தருளிய உண்மையருட்பாத் திருமுறைகள் தமிழ்வேதமெனப் பெயர்பெறும்.

அத்தமிழ்வேதத் திருப்பதிகங்களையுடைய தலங்கள உஎச என்ப.

அவற்றுள்: தலவிசேடம், தீர்த்தவிசேடம், மூர்த்திவிசேடமென்னும் இம்மூன்று விசேடங்களும் ஒருங்குடையதும், முழுமுதற்கடவுளாகிய முக்கணனருளுருக்கொண்டு கூச திருவிளையாடல்களைச் செய்தரு

ளிய பெருமை வாய்ந்ததும், அரிமர்த்தனபாண்டிய ராசன் மந்திரியாய், சைவசமயாசாரிய சுவாமிகளிலொருவருமாய ஸ்ரீமந் மணிவாசகப்பெருமான் "தென் மதுரை மாநகரு மல்லவோ சிவலோகம்" என விதந்து துதித்ததும் பூலோகசிவலோக மெனப்பெறும் திருவாலவாய் என்னும் பெயரையுடைய மதுரைமாநகர மாகும்.

அத்திருவாலவாய்க்குரிய தேவாரத் திருப்பதிகங் களையும்; தென்றிசைச்சார்பாயும் சிவபூமியாயும் விதந்து கூறப்பெற்றதும், பல சிறப்புகளா லோங்குவதுமாய ஈழ நாட்டுத் தேவாரப்பதிகங்களையும் தொகுத்து அச்சிட்டு நம் சைவசமய சகோதரர்களுக்கு உபகரிக்கவேண்டி. பிரபவ வருடம் ஆனிமீ கஉ சிவபதமடைந்த என தன்னை ஸ்ரீமதி சின்னச்சிப்பிள்ளையின் ஞாபகார்த்த மாக இதனை அர்ப்பணம் செய்கின்றேன்.

இத்தொகுதியை அச்சிடுதற்கு எழுதி உதவிய வேலணை ஸ்ரீ நடராசவித்தியாசாலை ஸ்தாபகரும், ஆசிரியருமாகிய ஸ்ரீமத் செ. கனகசபாபதிப்பிள்ளையவர்களுக்கு சிறியேன் நன்றியுணர்வுடையேன்.

மதிமுடிப் பெருமான்றிருவடி போற்றும் நம் சைவசமய சகோதரர் யாவரும் இதனைப் பெற்றுப் பாராயணஞ்செய்து பரமகிருபாமூர்த்தியாம் மீனாட்சி யம்பாள் சமேத சோமசுந்தரப்பெருமான்றிருவருளைப் பெற்றுய்வடையும்படி அம்மூர்த்தியருளால் வேண்டிக் கொள்ளுகின்றேன்.

"குமரகோட்டம்"
சரவணை,
யாழ்ப்பாணம்.

இங்ஙனம்
சர. வ. சோமசுந்தரன்.

திருச்சிற்றம்பலம்

# திருவாலவாய்

# தேவாரப்பதிகங்கள்.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் பதிகங்கள்.

## முதற்றிருமுறை.

### 1. பதிகம்.

திருவிருக்குக்குறள். பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

நீலமாமிடற்
றாலவாயிலான்
பாலதாயினார்
ஞாலமாள்வரே. (௧)

ஞாலமேழுமாம்
ஆலவாயிலார்
சீலமேசொலீர்
காலன்வீட்டவே. (௨)

ஆலநீழலார்
ஆலவாயிலார்
காலகாலனார்
பாலதாமினே. (௩)

அந்தமில்புகழ்
எந்தையாலவாய்
பந்தியார்கழல்
சிந்தைசெய்மினே. (௪)

ஆடலேற்றினான்
கூடலாலவாய்
பாடியேமனம்
நாடிவாழ்மினே. (௫)

அண்ணலாலவாய்
நண்ணினான்றனை
எண்ணியேதொழத்
திண்ணமின்பமே. (௬)

அம்பொனாலவாய்
நம்பனார்கழல்
நம்பிவாழ்பவர்
துன்பம்வீடுமே. (எ)

அருவனாலவாய்
மருவினான்றனை
யிருவரேத்தநின்
றுருவவோங்குமே. (௯)

அரக்கனார்வலி
நெருக்கனாலவாய்
உரைக்குமுள்ளத்தார்க்
கிரக்கமுண்மையே. (அ)

ஆரநாகமாஞ்
சீரனாலவாய்த்
தேரமண்செற்ற
வீரனென்பரே. (௧0)

அடிகளாலவாய்ப்
படிகொள்சம்பந்தன்
முடிவிலின்றமிழ்
செடிகணீக்குமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## இரண்டாந்திருமுறை
## 2. பதிகம்.
### திருநீற்றுப்பதிகம்.

பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மந்திரமாவதுநீறு வானவர்மேலதுநீறு
சுந்தரமாவதுநீறு துதிக்கப்படுவதுநீறு
தந்திரமாவதுநீறு சமயத்திலுள்ளதுநீறு
செந்துவர்வாயுமைபங்கன் திருவாலவாயான்றிருநீறே.()

வேதத்திலுள்ளதுநீறு வெந்துயர்தீர்ப்பதுநீறு
போதந்தருவதுநீறு புன்மைதவிர்ப்பதுநீறு
ஓதத்தகுவதுநீறு உண்மையிலுள்ளதுநீறு
சீதப்புனல்வயல்சூழ்ந்த திருவாலவாயான்றிருநீறே. (௨)

முத்திதருவதுநீறு முனிவரணிவதுநீறு
சத்தியமாவதுநீறு தக்கோர்புகழ்வதுநீறு
பத்திதருவதுநீறு பரவவினியதுநீறு
சித்திதருவதுநீறு திருவாலவாயான்றிருநீறே. (௩)

காணவினியதுநீறு கவினைத்தருவதுநீறு
பேணியணிபவர்க்கெல்லாம் பெருமைகொடுப்பதுநீறு
மாணந்தகைவதுநீறு மதியைத்தருவதுநீறு
சேணந்தருவதுநீறு திருவாலவாயான்றிருநீறே. (௪)

பூசவினியதுநீறு புண்ணியமாவதுநீறு
பேசவினியதுநீறு பெருந்தவத்தோர்களுக்கெல்லாம்
ஆசைகெடுப்பதுநீறு அந்தமதாவதுநீறு
தேசம்புகழ்வதுநீறு திருவாலவாயான்றிருநீறே. (௫)

அருத்தமதாவதுநீறு அவலமறுப்பதுநீறு
வருத்தந்தணிப்பதுநீறு வானமளிப்பதுநீறு
பொருத்தமதாவதுநீறு புண்ணியர்பூசும்வெண்ணீறு
திருத்தகுமாளிகைசூழ்ந்த திருவாலவாயான்றிருநீறே.

எயிலதுவட்டதுநீறு இருமைக்குமுள்ளதுநீறு
பயிலப்படுவதுநீறு பாக்கியமாவதுநீறு
துயிலைத்தடுப்பதுநீறு சுத்தமதாவதுநீறு
அயிலைப்பொலிதருசூலத் தாலவாயான்றிருநீறே. (௭)

இராவணன்மேலதுநீறு எண்ணத்தகுவதுநீறு
பராவணமாவதுநீறு பாவமறுப்பதுநீறு
தராவணமாவதுநீறு தத்துவமாவதுநீறு
அராவணங்குந்திருமேனி யாலவாயான்றிருநீறே. (௮)

மாலொடயனறியாத வண்ணமுமுள்ளதுநீறு
மேலுறைதேவர்கடங்கண் மெய்யதுவெண்பொடிநீறு
ஏலவுடம்பிடர்தீர்க்கும் இன்பந்தருவதுநீறு
ஆலமதுண்டமிடற்றெம் மாலவாயான்றிருநீறே. (௯)

குண்டிகைக்கையர்களோடு சாக்கியர்கூட்டமுங்கூட
கண்டிகைப்பிப்பதுநீறு கருதவினியதுநீறு
எண்டிசைப்பட்டபொருளார் ஏத்துந்தகையதுநீறு
அண்டத்தவர்பணிந்தேத்து மாலவாயான்றிருநீறே. ()

ஆற்றலடல்விடையேறும் ஆலவாயான்றிருநீற்றைப்
போற்றிப்புகலிநிலாவும் பூசுரன்ஞானசம்பந்தன்
தேற்றித்தென்னனுடலுற்ற தீப்பிணியாயினதீரச்
சாற்றியபாடல்கள்பத்தும் வல்லவர்நல்லவர்தாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

மதுரைத் திருப்பதியில் பாண்டியன் திருஞானசம்பந்தப்பிள்ளையாரையுஞ் சமணர்களையும் நோக்கி, என்னுடைய வெப்புநோயைத் தீர்த்தவர் எவரோ அவரே வாதில் வென்றவராவாரென்று சொல்ல, அதுகேட்ட சமணர்கள் நாங்களிடப்பாகத்து நோயைத் தீர்ப்போம்; சைவர்கள் வலப்பாகத்து நோயைத் தீர்க்கக்கடவர் என்று சொல்லி, அரசனுடைய இடப்பாகத்தைப் பீலியினாலே தடவினார்கள். அதனால் வெப்புநோய் வர வர அதிகரித்துக் கிளர, பாண்டியனதைப் பொறுக்கமாற்றாதவனாகி, பிள்ளையாரை நோக்கப் பிள்ளையாரும் "மந்திரமாவது நீறு" என்னுந் திருநீற்றுப்பதிகத்தைப் பாடி, அரசனுடைய வலப்பாகத்தை விபூதிகொண்டு தமதருமைத் திருக்கரத்தினாலே தடவியருள அவ்வலப்

பாகத்து வெப்புநோய் நீங்கிற்று. இடப்பாகத்து வெப்புநோய் முன்னையிலும் மிகுந்து பொங்க, பாண்டியன் சமணர்களைத் தம்மைவிட்டு விலகும்படி நீக்கிவிட்டுப் பிள்ளையாரை நோக்கி இடப்பாகத்து வெப்புநோயையுந் தேவரீரே நீக்கியருளுமென்று மனசினால் வணங்கிப் பிரார்த்தித்தான். பிள்ளையார் இடப்பாகத்தையும் விபூதிகொண்டு தடவியருளப் பாண்டியன் தன்னுடம்பு வெப்புநோய் முழுதும் நீங்கி உய்வடைந்தான். தேவாரமாகிய மந்திரத்தினாலும் விபூதியாகிய மருந்தினாலும் பாண்டியராசன் உடம்பிலுள்ள வெப்புநோயும், பிறவி நோயும் நீங்கிச் சைவனாதற்கேதுவாய பதிகம் இது வாகும்.

---

## மூன்றாந்திருமுறை

### 3. பதிகம்

பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

மானினேர்விழி மாதராய்வழு
திக்குமாபெருந் தேவிகேள்
பானல்வாயொரு பாலனீங்கிவ
னென்றுநீ பரிவெய்திடேல்
ஆனைமாமலை யாதியாய
விடங்களிற்பல வல்லல்சேர்
ஈனர்கட்கெளி யேனலேன்றிரு
வாலவா யரனிற்கவே. (க)

ஆகமத்தொடு மந்திரங்க
ளமைந்தசங்கத பங்கமாப்
பாகதத்தொ டிரைத்துரைத்த
சனங்கள்வெட்குறுபக்கமா
மாகதக்கரி போற்றிரிந்து
புரிந்துநின்றுணு மாசு'?சர்
ஆகதர்க்கெளி யேனலேன்றிரு
வாலவாயர னிற்கவே. (உ)

அத்தகுபொரு ளுண்டுமில்லையு
மென்றுநின்றவர்க் கச்சமா
யொத்தொவ்வாமை மொழிந்துவாதி
லழிந்தெழுந்த கவிப்பெயர்ச்
சத்திரத்தின் மடிந்தொடிந்து
சனங்கள்வெட்குற நக்கமே
சித்திரர்க்கெளி யேனலேன்றிரு
வாலவாயர னிற்கவே. (ஙூ)

சந்துசேனனு மிந்துசேனனுந்
தருமசேனனுங் கருமைசேர்
கந்துசேனனுங் கனகசேனனு
முதலதாகிய பெயர்கொளா
மந்திபோற்றிரிந் தாரியத்தொடு
செந்தமிழ்ப்பய னறிகிலா
அந்தகர்க்கெளி யேனலேன்றிரு
வாலவாயர னிற்கவே. (ச)

கூட்டினார்கிளி யின்விருத்தமு
ரைத்தமேதாரொலி யின்றொழிற்
பாட்டுமெய்சொலிப் பக்கமேசெலு
மெக்கர்தங்களைப் பல்லறம்
காட்டியேவரு மாடெலாங்கவர்
கையரைக்கசி வொன்றிலாச்
சேட்டைகட்கெளி யேனலேன்திரு
வாலவாயர ணிற்கவே. (௫)

கனகநந்தியும் புட்பநந்தியும்
பவணநந்தியுங் குமணமா
சுனகநந்தியுங் குனகநந்தியுந்
திவணநந்தியு மொழிகொளா
அனகநந்தியர் மதுபொழிந்தவ
மேதவம்புரி வோமெனுஞ்
சினகருக்கெளி யேனலேன்திரு
வாலவாயர ணிற்கவே. (௬)

பந்தணம்மவை யொன்றிலம்பரி
வொன்றிலம்மென வாசக
மந்தணம்பல பேசிமாசறு
சீர்மையின்றிய நாயமே
அந்தணம்மரு கந்தணம்மது
புத்தணம்மது சித்தணச்
சிந்தணார்க்கெளி யேனலேன்திரு
வாலவாயர ணிற்கவே. (௭)

மேலெனக்கெதி ரில்லையென்ற
வரக்கனூர்மிகை செற்றதீப்
போவியைப்பணி யக்கிலாதொரு
பொய்த்தவங்கொடு குண்டிகைப்
பீலிகைக்கொடு பாயிடுக்கி
நடுக்கியேபிறர் பின்செலுஞ்
சீலிகட்கெளி யேனலேன்றிரு
வாலவாயர னிற்கவே. (அ)

பூமகற்கும ரிக்குமோர்வரு
புண்ணியனடி போற்றிலார்
சாமவத்தையி னூர்கள்போறலை
யைப்பறித்தொரு பொய்த்தவம்
வேமவத்தை செலுத்திமெய்ப்பொடி
யட்டிவாய்சக திக்குநேர்
ஆமவர்க்கெளி யேனலேன்றிரு
வாலவாயர னிற்கவே. (சு)

தஙகளுக்குமச் சாக்கியர்க்குந்
தரிப்பொணாதநற் சேவடி
யெங்கணாயகன் ஏத்தொழிந்திடுக்
கேமடுத்தொரு பொய்த்தவம்
பொங்குநூல்வழி யன்றியேபுல
வோர்களைப்பழிக் கும்பொலா
அங்கதர்க்கெளி யேனலேன்றிரு
வாலவாயர னிற்கவே. (க0)

எக்கராமமண் கையருக்கெளி
 யேனலேன்றிரு வாலவாய்ச்
சொக்கனென்னு ளிருக்கலேதுளங்
 கும்முடித்தென்னன் முன்னிவை
தக்கசீர்ப்புக ழிக்குமன்றமிழ்
 நாதன்ஞானசம் பந்தன்வாய்
ஒக்கவேயுரை செய்தபத்துமு
 ரைப்பவர்க்கிட ரில்லையே.

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தப்பிள்ளையார் மதுரைத் திருப்பதியில் பாண்டியராசனுடைய வெப்புநோயைத் தீர்க்க எழுந்தருளியிருந்தபோது சமீபத்திலிருந்த சமணர்கள் பொறுமைகொண்டு கோபாக்கினி சொலிக்கக் கண்கள் சிவந்து அவரை வாதினால் வெல்லக் கருதி, தங்கள் சமய நூல்களை எடுத்துச் சொல்லிக் குரைத்தார்கள். பாண்டிமாதேவியார் அதுகண்டு பொருமாகி மனநடுங்கித் தன் நாயகனை நோக்கி, "தலைவரே! சுவாமிகள் சிறுபாலர், இச்சமணர்களோ எண்ணில்லாதவர்கள். என் பிராணநாயகரே! எம்பெருமானார் உம்முடைய நோயை நீக்கியருளியபின் இச்சமணர்கள் பேசவல்லவராயிற் பேசக்கடவர்கள்" என்றார். அப்பொழுது பிள்ளையார் பாண்டிமாதேவியாரை நோக்கி, "மாதேவியே! என்னை நீ பாலனென்று அஞ்சவேண்டாம்; "திருவாலவாயானிற்க" நான் சமணர்களுக்கு எளியேனல்லேன்" என்னுங் கருத்தினையுடைய "மானினேர்விழி மாதராய்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளினார்.

---

## 4. பதிகம்.

திருச்சிற்றம்பலம்.

பண் - கௌசிகம்.

காட்டுமாவ துரித்துரிபோர்த்துடல்
நாட்டமூன் றுடை யாயுரைசெய்வனுன்
வேட்டுவேள்விசெய் யாவமண்கையரை
ஓட்டிவாது செயத்திருவுள்ளமே. (க)

மத்தயானையி னீருரிமூடிய
வத்தனேயணி யாலவாயாய்பணி
பொய்த்தவன்றவ வேடத்தராஞ்சமண்
சித்தரையழிக்கத் திருவுள்ளமே. (உ)

மண்ணகத்திலும் வானிலுமெங்குமாந்
திண்ணகத்திரு வாலவாயாயருள்
பெண்ணகத்தெழிற் சாக்கியபேயமண்
தெண்ணர்கற்பழிக்கத் திருவுள்ளமே. (ங)

ஓதியோத்தறி யாவமணாதரை
வாதில்வென் றழிக்கத் திருவுள்ளமே
ஆதியேதிரு வாலவாயண்ணலே
நீதியாக நினைந்தருள்செய்திடே. (ச)

வையமார்புகழா யடியார்தொழும்
செய்கையார்திரு வாலவாயாய்செப்பாய்
கையிலுண்டுழ லும்மமண்கையரை
பையவாதுசெயத் திருவுள்ளமே. (ரு)

நாறுசேர்வயற் றண்டலைமிண்டிய
தேறலார்திரு வாலவாயாய்செப்பாய்
வீறிலாத்தவ மோட்டமண்வேடரைச்
சீறிவாதுசெயத் திருவுள்ளமே. (௬)

பண்டடித்தவத் தார்பயில்வாற்றெழும்
தொண்டருக்கெளி யாய்திருவாலவாய்
அண்டனேயமண் கையரைவாதினிற்
செண்டடித்துளறத் திருவுள்ளமே. (௭)

அரக்கன்றான்கிரி யேற்றவன்றன்முடிச்
செருக்கினைத்தவிர்த் தாய்திருவாலவாய்
பரக்குமாண்புடை யாயமண்பாவரைக்
கரக்கவாதுசெயத் திருவுள்ளமே. (௮)

மாலுநான்முகனு மறியாய்நெறி
ஆலவாயுறையு மண்ணலேபணி
மேலைவீடுணரா வெற்றரையரைச்
சாலவாதுசெயத் திருவுள்ளமே. (௯)

கழிக்கரைப்படு மீன்கவர்வாரமண்
அழிப்பரையழிக்கத் திருவுள்ளமே
தெழிக்கும்பூம்புனல் சூழ்திருவாலவாய்
மழுப்படையுடை மைந்தனேநல்கிடே. (௧௦)

செந்தெனுமுரலுந் திருவாலவாய்
மைந்தனேயென்று வல்லமணுசறச்
சந்தமார்தமிழ் கேட்டமெஞ்ஞானசம்
பந்தன்சொற்பகரும் பழிநீங்கவே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தப்பிள்ளையார் சமணர்களை வாது செய்து வெல்லுதற்குத் திருவாலவாய்ச் சொக்கலிங்கப் பெருமான் திருவுள்ளத்தை யறியும்பொருட்டு மடாலயத்தினின்றும் நீங்கிச் சிவனடியார் திருக்கூட்டத்துடன் திருவாலவாயிற் புகுந்து "காட்டுமாவதுரித்து" என்னுந் திருப்பதிகம் பாடிச் சிவபிரானுடைய திருவுள்ளத்தை அறிந்தருளினர்.

---

## 5. பதிகம்

திருச்சிற்றம்பலம்.

பண் - கௌசிகம்.

செய்யனேதிருவாலவாய்மேவிய
ஐயனேயஞ்சலென்றருள்செய்யெனைப்
பொய்யராமமணர்கொளுவுஞ்சுடர்
பையவேசென்றுபாண்டியற்காகவே. (௧)

சித்தனேதிருவாலவாய்மேவிய
அத்தனேயஞ்சலென்றருள்செய்யெனை
எத்தராமமணர்கொளுவுஞ்சுடர்
பத்திமன்றென்னன்பாண்டியற்காகவே. (௨)

தக்கன்வேள்விதகர்த்தருளாலவாய்
சொக்கனேயஞ்சலென்றருள்செய்யெனை
எக்கராமமணர்கொளுவுஞ்சுடர்
பக்கமேசென்றுபாண்டியற்காகவே. (௩)

சிட்டனேதிருவாலவாய்மேவிய
அட்டமூர்த்தியனேயஞ்சலென்றருள்
துட்டராமமணர்கொளுவுஞ்சுடர்
பட்டிமன்றென்னன்பாண்டியற்காகவே. (௪)

நண்ணலார்புரமூன்றெரியாலவாய்
அண்ணலேயஞ்சலென்றருள்செய்யெனை
எண்ணிலாவமணர்கொளுவுஞ்சுடர்
பண்ணியற்றமிழ்ப்பாண்டியற்காகவே. (௫)

தஞ்சமென்றுன்சரண்புகுந்தேனையும்
அஞ்சலென்றருள் ஆலவாய் அண்ணலே
வஞ்சஞ்செய்தமணர்கொளுவுஞ்சுடர்
பஞ்சவன்றென்னன்பாண்டியற்காகவே. (௬)

செங்கண்வெள்விடையாய்திருவாலவாய்
அங்கணவஞ்சலென்றருள்செய்யெனைக்
கங்குலாரமண்கையரிடுங்கனல்
பங்கமிறென்னன்பாண்டியற்காகவே. (௭)

தூர்த்தன்வீரந்தொலைத்தருளாலவாய்
ஆத்தனேயஞ்சலென்றருள்செய்யெனை
எத்திலாவமணர்கொளுவுஞ்சுடர்
பார்த்திவன்றென்னன்பாண்டியற்காகவே. (௮)

தாவினனயன்றானறியாவகை
மேவினாய்திருவாலவாயாயருள்
தூவிலாவமணர்கொளுவுஞ்சுடர்
பாவினன்றென்னன்பாண்டியற்காகவே. (௯)

எண்டிசைக்கெழிலாலவாய்மேவிய
அண்டனையஞ்சலென்றருள்செய்யெனைக்
குண்டராமமணர்கொளுவுஞ்சுடர்
பண்டிமன்றென்னன்பாண்டியற்காகவே. (௧0)

அப்பனாலவாயாதியருளினால்
வெப்பந்தென்னவன்மேலுறமேதினிக்
கொப்பஞானசம்பந்தனுரைபத்துஞ்
செப்பவல்லவர்தீதிலாச்செல்வரே.

திருச்சிற்றம்பலம்.

மதுரைத்திருப்பதியிலே திருஞானசம்பந்தப்பிள்ளையார் அடியார்களோடும் எழுந்தருளியிருக்கின்ற திருமடத்திலே திருத்தொண்டர்கள் ஓதுகின்ற திருப்பதிக விசையின் பேரொலி செவிப்புலப்பட, சமணர்கள் அது பொறாராகிப் பாண்டியன் அநுமதியுடன் அத்திருமடத்திலே அக்கினிபற்றும்படி மந்திரஞ் செபித்தார்கள். உயர்வொப்பில்லாத ஸ்ரீ பஞ்சாட்சரத்தை ஓதும் அடியாருறையுந் திருமடத்திலே தங்கள் மந்திர சாதனைகள் பலியாமையைக்கண்ட சமணர்கள் மனந்தளர்ந்து அக்கினியைக் கொண்டுபோய்த் திருமடப்புறஞ் சுற்றிலே கொளுத்தினார்கள். திருமடந் தீப்பற்றி யெரிதலைக் கண்ட பரிசனத்தவர்கள் பிள்ளையாரிடத்தில் விண்ணப்பஞ்செய்ய, பிள்ளையார் சிவனடியார்களுக்குத் தீங்கு வருமோவெனத் திருவுளங்கொண்டு, "செய்யனே திருவாலவாய்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளினார். உடனே யவ்வக்கினிவெம்மை போய் அத்தீமைக்குக் காரணாகிய பாண்டியனை யடைந்தது. சிவனடியார்க்

கபராதஞ்செய்தவர் அரசராற் றண்டிக்கப்படவேண்டும். அரசன் தண்டியாதுவிடின் அத்தீமை யரசனையடையு மென்பதைத் திருஷ்டாந்தத்தால் காட்டியதாகும்.

---

## 6. பதிகம்.

திருச்சிற்றம்பலம்.

### திருவிராகம். பண் - கௌசிகம்.

வீடலாலவாயிலாய் விழுமியார்களின்கழல்
பாடலாலவாயிலாய் பரவநின்றபண்பனே
காடலாலவாயிலாய் கபாலிநீள்கடிம்மதிற்
கூடலாலவாயிலாய் குலாயதென்னகொள்கையே. (க)

பட்டிசைந்தவல்குலாள் பாவையாளோர்பாகமா
ஒட்டிசைந்ததன்றியும் முச்சியாளொருத்தியாய்
கொட்டிசைந்தவாடலாய் கூடலாலவாயிலாய்
எட்டிசைந்தமூர்த்தியா யிருந்தவாறிதென்னையே. (உ)

குற்றநீகுணங்கணீ கூடலாலவாயிலாய்
சுற்றநீபிரானுநீ தொடர்ந்திலங்குசோதிநீ
கற்றநூற்கருத்துநீ யருத்தமின்பமென்றிவை
முற்றுநீபுகழ்ந்துமுன் னுரைப்பதென்முகம்மனே. (ந)

முதிருநீர்ச்சடைமுடி முதல்வநீமுழங்கழல்
அதிரவீசியாடுவா யழகநீபுயங்கணீ
மதுரநீமணாளநீ மதுரையாலவாயிலாய்
சதுரநீர்சதுர்முகன் கபாலமேந்துசம்புவே. (ச)

கோலமாயநீண்மதிற் கூடலாலவாயிலாய்
பாலனுயதொண்டுசெய்து பண்டுமின்றுமுன்னைமே
நீலமாயகண்டனே நின்னையன்றிநித்தலும்
சீலமாயசிந்தையிற் றேர்வதில்லைத்தேவரே. (ரு)

பொன்றையங்கிலங்கொளின் னலங்குளிர்ந்தபுன்சடை
பின்றயங்கவாடுவாய் பிஞ்ஞகாபிறப்பிலீ
கொன்றையம்முடியினுய் கூடலாலவாயிலாய்
நின்றயங்கியாடுவாய் நினைப்பதென்னியமமே. (சு)

ஆதியந்தமாயினுய் ஆலவாயிலண்ணலே
சோதியந்தமாயினுய் சோதியுள்ளொர்சோதியாய்
கீதம்வந்தவாய்மையாற் கிளர்தருக்கினுர்க்கலால்
ஓதிவந்தவாய்மையால் உணர்ந்துரைக்கலாகுமே. (எ)

கறையிலங்குகண்டனே கருத்திலாக்கருங்கடற்
றுறையிலங்குமன்னனைத் தோளடரவூன்றினுய்
மறையிலங்குபாடலாய் மதுரையாலவாயிலாய்
நிறையிலங்குநெஞ்சினு னினைப்பதேநியமமே. (அ)

தாவணவிடையினுய் தலைமையாகநாடொறும்
கோவணவ்வுடையினுய் கூடலாலவாயிலாய்
தீவணம்மலர்மிசைத் திசைம்முகனுமாலுநின்
றாவணம்மளக்கிலார் துளக்கமெய்துவார்களே. (கூ)

தேற்றமில்வினைத்தொழிற் றேரருஞ்சமணரும்
போற்றிசைத்துநின்கழற் புகழ்ந்துபுண்ணியங்கொளார்
கூற்றுதைத்ததாளினுய் கூடலாலவாயிலாய்
நாற்றிசைக்குமூர்த்தியாகி நின்றதென்னநன்மையே. (க0)

போயநீர்வளங்கொளும் பொருபுனற்புகலியான்
பாயவேள்விஞானசம் பந்தனல்லபண்பினால்
ஆயசொல்லின்மாலைகொண் டாலவாயிலண்ணலைத்
தீயதீரவெண்ணுவார்கள் சிந்தையார்வர்தேவரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் மதுரைமாநகரத்திலே சமணசமயத்தைப் பாழாக்கிச் சைவசமயத்தைப் பரப்பியபின் அங்ஙனஞ் செய்தற் கருள்புரிந்த சொக்கலிங்கப் பெருமானைத் தரிசிக்கவிரும்பி, பாண்டியராசரும் மாதேவியாரும் மந்திரியாகிய குலச்சிறை நாயனாரும் தம்மைத் தோத்திரஞ்செய்துகொண்டு உடன்புகத் திருக்கோயிலி னுட்புகுந்து வலஞ்செய்து சந்நிதானத்தை யடைந்து சொக்கலிங்கப்பெருமானை வணங்கி "வீடலாலவாயிலாய்" என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளினார்.

---

## 7. பதிகம்.

நாலடிமேல் வைப்பு.

பண் - பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

வேதவேள்வியை நிந்தனைசெய்துழல்
ஆதமில்லி யமணொடுதேரரை
வாதில்வென்றழிக் கத்திருவுள்ளமே
பாதிமாதுட னாயபரமனே
ஞாலநின்புக ழேமிகவேண்டுந்தென்
ஆலவாயி லுறையுமெம்மாதியே. (க)

வைதிகத்தின் வழியொழுகாதவக்
கைதவமுடைக் காரமண்டேரை
எய்திவாது செயத்திருவுள்ளமே
மைதிகழ்தரு மாமணிகண்டனே
ஞாலநின்புக ழேநிற்கவேண்டுந்தென்
ஆலவாயி லுறையுமெம்மாதியே. (உ)

மறைவழக்க மிலாதமாபாவிகள்
பறிதலைக்கையர் பாயுடுப்பார்களை
முறியவாது செயத்திருவுள்ளமே
மறியுலாங்கையின் மாமழுவாளனே
ஞாலநின்புக ழேநிற்கவேண்டுந்தென்
ஆலவாயி லுறையுமெம்மாதியே. (ங)

அறுத்தவங்கமா றாயினநீர்மையைக்
கறுத்தவாழமண் கையர்கடம்மொடுப்
செறுத்துவாது செயத்திருவுள்ளமே
முறித்தவாண்மதிக் கண்ணிமுதல்வனே
ஞாலநின்புக ழேமிகவேண்டுந்தென்
ஆலவாயி லுறையுமெம்மாதியே. (ச)

அந்தணாளர் புரியுமருமறை
சிந்தைசெய்யா வருகர்திறங்களைச்
சிந்தவாது செயத்திருவுள்ளமே
வெந்தநீற தணியும்விகிர்தனே
ஞாலநின்புக ழேமிகவேண்டுந்தென்
ஆலவாயி லுறையுமெம்மாதியே. (ரு)

வேட்டுவேள்வி செயும்பொருளைவிளி
மூட்டுசிந்தை முருட்டமண்குண்டரை

ஓட்டிவாது செயத்திருவுள்ளமே
காட்டிலானை யுரித்தவெங்கள்வனே
ஞாலநின்புக ழேமிகவேண்டுந்தென்
ஆலவாயி லுறையுமெம்மாதியே. (சு)

அழலதோம்பு மருமறையோர்திறம்
விழலதென்னு மருகர்திறத்திறங்
கழலவாது செயத்திருவுள்ளமே
தழலிலங்கு திருவுருச்சைவனே
ஞாலநின்புக ழேமிகவேண்டுந்தென்
ஆலவாயி லுறையுமெம்மாதியே. (எ)

நீற்றுமேனிய ராயினர்மேலுற்ற
காற்றுக்கொள்ளவு நில்லாவமணரைத்
தேற்றிவாது செயத்திருவுள்ளமே
ஆற்றவாளரக் கற்குமருளினாய்
ஞாலநின்புக ழேமிகவேண்டுந்தென்
ஆலவாயி லுறையுமெம்மாதியே. (அ)

நீலமேனி யமணர்திறத்துநின்
சீலம்வாது செயத்திருவுள்ளமே
மாலுநான்முக னுங்காண்பரியதோர்
கோலமேனிய தாகியகுன்றமே
ஞாலநின்புக ழேமிகவேண்டுந்தென்
ஆலவாயி லுறையுமெம்மாதியே. (கூ)

அன்றுமுப்புரஞ் செற்றவழகநின்
துன்றுபொற்கழல் பேணவருகரைத்
தென்றவாது செயத்திருவுள்ளமே
கன்றுசாக்கியர் காணாத்தலைவனே

ஞாலநின்புக ழேமிகவேண்டுந்தென்
ஆலவாயி லுறையு மெம்மாதியே. (கO)

கூடலாலவாய்க் கோனைவிடைகொண்டு
வாடன்மேனி யமணரைவாட்டிட
மாடக்காழிச் சம்பந்தன்மதித்தவிப்
பாடல்வல்லவர் பாக்கியவாளரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் "காட்டுமாவ துரித்து" என்னுந் திருப்பதிகம் பாடிச் சோமசுந்தரப் பெருமான் திருவுளக்குறிப்பை யறிந்தபின்னர் சமணர்களை வாதில்வென் றழிக்கும்பொருட்டும் சிவநாமத்தையே பரவச்செய்யும்பொருட்டும் "வேதவேள்வியை" என்னுந் திருப்பதிகத்தைப் பாடியருளினார்.

---

## 8. பதிகம்.

### திருவியமகம்.

திருச்சிற்றம்பலம்.

ஆலநீழ லுகந்த திருக்கையே
யானபாட லுகந்த திருக்கையே
பாலினேர்மொழி யாளொருபங்கனே
பாதமோதலர் சேர்புரபங்கனே
கோலநீறணி மேதகுபூதனே
கோதிலார்மன மேவியபூதனே
ஆலநஞ்சமு துண்டகளத்தனே
யாலவாயுறை யண்டர்களத்தனே. (க)

பாதியாவுடன் கொண்டதுமாலையே
பாம்புதார்மலர்க் கொன்றைநன்மாலையே
கோதில்நீறது பூசிடுமாகனே
கொண்டநற்கையின் மானிடமாகனே
நாதனொடொறு மாடுவதானையே
நாடியன்றுரி செய்ததுமானையே
வேதநூல்பயில் கின்றதுவாயிலே
விகிர்தனூர்திரு வாலகல்வாயிலே. (உ)

காடுநீடது றப்பலகத்தனே
காதலானிணை வார்தமக்கத்தனே
பாடுபேயொடு பூதமசிக்கவே
பல்பிணத்தசை நாடியசிக்கவே
நீடுமாநட மாடவிருப்பனே
நின்னடித்தொழ நாளுமிருப்பனே
ஆடநீள்சடை மேவியவப்பனே
யாலவாயினின் மேவியவப்பனே. (ங)

பண்டயன்றலை யொன்றுமறுத்தியே
பாதமோதினர் பாவமறுத்தியே
துண்டவெண்பிறை சென்னியிருத்தியே
தூயவெள்ளெரு தேறியிருத்தியே
கண்டுகாமனை வேவவிழித்தியே
காதலில்லவர் தம்மையிழித்தியே
அண்டநாயக னேமிகுகண்டனே
யாலவாயினின் மேவியகண்டனே. (ச)

சென்றுதாதை யுகுத்தனன்பாலையே
சீறியன்பு செகுத்தனன்பாலையே

வென்றிசேர்மழுக் கொண்டுமுன்காலே
வீடவெட்டிடக் கண்டுமுன்காலையே
நின்றமாணியை யோடினகங்கையா
னிலவமல்கி யுதித்தனகங்கையால்
ஒன்றுநின்னுரு வாகத்தடவியே
யாலவாயர னாகத்தடவியே. (௫)

நக்கமேகுவர் நாடுமோருருமே
நாதன்மேனியின் மாசுணமூருமே
தக்கபூமணச் சுற்றக்கருளொடே
தாரமுய்த்தது பாணர்க்கருளொடே
மிக்கதென்னவன் தேவிக்கணியையே
மெல்லநல்கிய தொண்டர்க்கணியையே
அக்கினாமு தண்கலனோடுமே
யாலவாயர னருமையோடுமே. (௬)

வெய்யவன்பல் லுகுத்ததுகுட்டியே
வெங்கண்மாசுணங் கையதுகுட்டியே
ஐயனேயன லாடியமெய்யனே
யன்பினானினை வார்க்கருண்மெய்யனே
வையமுய்யவன் றுண்டதுகாளமே
வள்ளல்கையது மேவுகங்காளமே
ஐயமேற்ப துரைப்பதுவீணையே
யாலவாயரன் கையதுவீணையே. (௭)

தோள்கள்பத்தொடு பத்துமயக்கியே
தொக்கதேவர் செருக்கைமயக்கியே
வாளரக்க நிலத்துக்களித்துமே
வந்தமால்வரை கண்டுகளித்துமே

நீள்பொருப்பை யெடுத்தவுன்மத்தனே
நின்விரற்றலை யான்மதமத்தனே
ஆளுமாதி முறித்ததுமெய்கொலோ
ஆலவாயர னுய்த்ததுமெய்கொலோ. (அ)

பங்கயத்துள நான்முகன்மாலொடே
பாதநீண்முடி நேடிடமாலொடே
துங்ககற்றழ லின்னுருவாயுமே
தூயபாடல் பயின்றதுவாயுமே
செங்கயற்கணி னாரிடுபிச்சையே
சென்றுகொண்டுரை செய்வதுபிச்சையே
அங்கியைத்திகழ் விப்பதிடக்கையே
யாலவாயர னாரிடக்கையே. (கூ)

தேரரோடம ணர்க்குனல்காணேயே
தேவர்நாடொறுஞ் சேர்வதுகோணேயே
கோரமட்டது புண்டரிகத்தையே
கொண்டநீழ்கழல் புண்டரிகத்தையே
நேரிலூர்கள ழித்ததுநாகமே
நீள்சடைத்திகழ் கின்றவுநாகமே
ஆரமாகவு கந்ததுமென்பதே
யாலவாயர னாரிடமென்பதே. (கO)

ஈனஞானிக டம்மொடுவிரகனே
யேறுபல்பொருள் முத்தமிழ்விரகனே
ஆனகாழியுண் ஞானசம்பந்தனே
யாலவாயினின் மேயசம்பந்தனே
ஆனவானவர் வாயிலுள்த்தனே
யன்பரானவர் வாயிலுளத்தனே
நானுரைத்தன செந்தமிழ்ப்பத்துமே
வல்லவர்க்கிவை நற்றமிழ்பத்துமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் மதுராபுரியில் எழுந்தருளியிருந்தபோது "ஆலநீழ லுகந்த திருக்கையே" என்னுந் திருவியமகத் திருப்பதிகத்தைப் பாடியருளி, அதிலே திருநீலகண்டப்பெரும்பாணருக்குச் சிவபிரானருளிய திறத்தையும் அமைத்துப் பாடித் துதித்தருளினார்.

## 9. பதிகம்.

பண் - புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

மங்கையர்க்கரசி வளவர்கோன்பாவை
வரிவளைக் கைம்மடமானி
பங்கயச்செல்வி பாண்டிமாதேவி
பணிசெய்து நாடொறும்பரவப்
பொங்கழலுருவன் பூதநாயகனால்
வேதமும் பொருள்களுமருளி
அங்கயற்கண்ணி தன்னொடுமமர்ந்த
வாலவா யாவதுமிதுவே. (க)

வெற்றவேயடியா ரடிமிசைவீழும்
விருப்பினன் வெள்ளைநீறணியுங்
கொற்றவன்றனக்கு மந்திரியாய
குலச்சிறை குலாவிநின்றேத்தும்
ஒற்றைவெள்விடைய னும்பரார்தலைவ
னுலகினி லியற்கையையொழிந்திட்
டற்றவர்க்கற்ற சிவனுறைகின்ற
வாலவா யாவதுமிதுவே (உ)

செந்துவர்வாயாள் சேலனகண்ணாள்
சிவன்றிரு நீற்றினைவளர்க்கும்
பந்தணைவிரலாள் பாண்டிமாதேவி
பணிசெயப் பாரிடைநிலவும்
சந்தமார்தரளம் பாம்புநீர்மத்தந்
தண்ணெருக் கம்மலர்வன்னி
அந்திவான்மதிசேர் சடைமுடியண்ண
லாலவா யாவதுமிதுவே. (௩)

கணங்களாய்வரினுந் தமியராய்வரினு
மடியவர் தங்களைக்கண்டால்
குணங்கொடுபணியுங் குலச்சிறைகுலாவுங்
கோபுரஞ் சூழ்மணிக்கோயில்
மணங்கமழ்கொன்றை வாளராமதியம்
வன்னிவண் கூவிளமாலை
அணங்குவீற்றிருந்த சடைமுடியண்ண
லாலவா யாவதுமிதுவே. (௪)

செய்யதாமரைமே லன்னமேயனைய
சேயிழை திருநுதற்செல்வி
பையரவல்குற் பாண்டிமாதேவி
நாடொறும் பணிந்தினிதேத்த
வெய்யவேற்சூலம் பாசமங்குசமான்
விரிகதிர் மழுவுடன்றரித்த
மையணுருமையோ டின்புறுகின்ற
வாலவா யாவதுமிதுவே (௫)

நலமிலராக நலமதுண்டாக
நாடவர் நாடறிகின்ற

குலமிலராகக் குலமதுண்டாகத்
தவம்பணி குலச்சிறைபரவுங்
கலைமலிகரத்தன் மூவிலைவேலன்
கரியுரி மூடியகண்டன்
அலைமலிபுனல்சேர் சடைமுடியண்ண
லாலவா யாவதுமிதுவே (சு)

முத்தின்றாழ்வடமுஞ் சந்தணக்குழம்பு
நீறுந்தன் மார்பினில்முயங்கப்
பத்தியார்கின்ற பாண்டிமாதேவி
பாங்கொடு பணிசெயநின்ற
சுத்தமார்பளிங்கின் பெருமலையுடனே
சுடர்மர கதமடுத்தாற்போல்
அத்தனாருமையோ டின்புறுகின்ற
வாலவா யாவதுமிதுவே (எ)

நாவணங்கியல்பா யஞ்செழுத்தோதி
நல்லராய் நல்லியல்பாகும்
கோவணம்பூதி சாதனங்கண்டாற்
றொழுதெழு குலச்சிறைபோற்ற
ஏவணங்கியல்பா மிராவணன்றிண்டோ
ளிருமது நெரிதரவூன்றி
ஆணவங்கொண்ட சடைமுடியண்ண
லாலவா யாவதுமிதுவே (அ)

மண்ணெலாநிகழ மன்னனாய்மன்னு
மணிமுடிச் சோழன்றன்மகளாம்
பண்ணினேர்மொழியாள் பாண்டிமாதேவி
பாங்கினாற் பணிசெய்துபரவ

விண்ணுளாரிருவர் கீழொடுமேனு
மளப்பரி தாம்வகைநின்ற
அண்ணலாருமையோ டின்புறுகின்ற
வாலவா யாவதுமிதுவே (௯)

தொண்டராயுள்ளார் திசைதிசைதோறுந்
தொழுதுதன் குணத்தினைக்குலாவக்
கண்டுநாடொறு மின்புறுகின்ற
குலச்சிறை கருதிநின்றேத்தக்
குண்டராயுள்ளார் சாக்கியர்தங்கள்
குறியின்க ணெறியிடைவாரா
அண்டர்நாயகன்று னமர்ந்துவீற்றிருந்த
வாலவா யாவதுமிதுவே. (௧0)

பன்னலம்புணரும் பாண்டிமாதேவி
குலச்சிறை யெனுமிவர் பணியுங்
அங்கலம்பெறுசீ ராலவாயீசன்
றிருவடி யாங்கவைபோற்றிக்
கன்னலம்பெரிய காழியுள்ஞான
சம்பந்தன் செந்தமிழிவைகொண்
டின்னலம்பாட வல்லவரிமையோ
ரேத்தவீற் றிருப்பவரினிதே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் மதுராபுரியைச் சமீபித்த செய்தியை மங்கையர்க்கரசியார் கேள்வியுற்று, குலச்சிறைநாயனாரை நோக்கி, நமது தம்பிரானாராகிய திருஞானசம்பந்த சுவாமிகளை எதிர்கொள்ளுமென்று ஏவி, தாம் தம்முடைய பரிசனங்கள் சூழ ஆலயத்திற் சென்று சொக்கலிங்கப்பெருமானை நமஸ்கரித்து, பிள்ளையாருடைய நல்வரவை எதிர்பார்த்து நின்றார்.

குலச்சிறைநாயனு ரவ்வாறு மதுரைமாநகரத்தின் புறத்திலேபோய், பிள்ளையாரை எதிர்கொண்டு பாண்டி மாதேவியார் தேவரீர் இங்கெழுந்தருளுதலைக் கேட்டுப் பெருமகிழ்ச்சிகொண்டு நமது பெருவாழ்வு எழுந்தருளி யது நீர் போய் எதிர்கொண்டு திருவடிபணிந்து அழைத்து வரக்கடவீரென அடியேனை ஏவினுரென்று விண்ணப்பஞ்செய்து நமஸ்கரித்துத் துதித்தார்.

பிள்ளையாரங்ஙனம் வணங்கித்துதித்த குலச்சிறை நாயனுருக்கு அருளுடன் ஆசீர்வசனங்கள் கூறியருளிய பொழுது திருவாலவாய்த் திருக்கோபுரம் எதிரே தோன்றக்கண்டு கைகுவித்து மிகுந்த அன்போடு பூமியின் மேல் விழுந்து நமஸ்கரித்து "மங்கையர்க்கரசி" என் றெடுத்து மங்கையர்க்கரசியாருங் குலச்சிறை நாயனுரும் ஆகிய இருவருடைய திருத்தொண்டைச் சிறப்பித்துத் திருப்பாட்டிறுதிதோறும் "ஆலவாயாவதுமிதுவே" என்பதையமைத்துத் திருப்பதிகம் பாடிக்கொண்டே திருவாலவாயை யடைந்தனர்.

---

## பொது.

## 10. பதிகம்.

## முதற்றிருமுறை.

திருநள்ளாறும்—திருவாலவாயும்.

வினுவுரை. பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

பாடகமெல்லடிப் பாவையோடும்
படுபிணக்காடிடம் பற்றிநின்று
நாடகமாடு நள்ளாறுடைய

நம்பெருமானிது வென்கொல்சொல்லாய்
சூடகமுன்கை மடந்தைமார்கள்
துணைவரொடுந்தொழு தேத்திவாழ்த்த
ஆடகமாட நெருங்குகூட
லாலவாயின்க ணமர்ந்தவாறே. (க)

திங்களப்போதுஞ் செழும்புனலுஞ்
செஞ்சடைமாட்டயல் வைத்துகந்து
நங்கள்மகிழு நள்ளாறுடைய
நம்பெருமானிது வென்கொல்சொல்லாய்
பொங்கிளமென்முலை யார்களோடும்
புனமயிலாட நிலாமுளைக்கும்
அங்களகச்சுனை மாடக்கூட
லாலவாயின்க ணமர்ந்தவாறே. (உ)

தண்ணறுமத்தமுங் கூவிளமும்
வெண்டலைமாலையுந் தாங்கியார்க்கும்
நண்ணலரிய நள்ளாறுடைய
நம்பெருமானிது வென்கொல்சொல்லாய்
புண்ணியவாணரு மாதவரும்
புகுந்துடனேத்தப் புனையிழையார்
அண்ணலின்பாட லெடுக்குங்கூட
லாலவாயின் கணமர்ந்தவாறே. (ங)

பூவினில்வாசம் புனலிற்பொற்புப்
புதுவிரைச்சாந்தினி னாற்றத்தோடு
நாவினிற்பாட னள்ளாறுடைய
நம்பெருமானிது வென்கொல்சொல்லாய்

தேவர்கள்தானவர் சித்தர்விச்சா
தரர்கணத்தோடுஞ் சிறந்துபொங்கி
ஆவினிலைந்துகந் தாட்டுங்கூட
லாலவாயின் கணமர்ந்தவாறே. (௪)

செம்பொன்செய்மாலையும் வாசிகையுந்
திருந்துபுகையு மவியும்பாட்டும்
நம்பும்பெருமை நள்ளாறுடைய
நம்பெருமானிது வென்கொல்சொல்லாய்
உம்பருநாக ருலகந்தானு
மொலிகடல்சூழ்ந்த வுலகத்தோடும்
அம்புதநால்களா ணீடுங்கூட
லாலவாயின்க ணமர்ந்தவாறே. (௫)

பாகமுந்தேவியை வைத்துக்கொண்டு
பைவிரிதுத்திப் பரியபேழ்வாய்
நாகமும்பூண்ட நள்ளாறுடைய
நம்பெருமானிது வென்கொல்சொல்லாய்
போகமுநின்னை மனத்துவைத்துப்
புண்ணியர்நண்ணும் புணர்வுபூண்ட
ஆகமுடையவர் சேருங்கூட
லாலவாயின்க ணமர்ந்தவாறே. (௬)

கோவணவாடையு நீறுபூச்சுங்
கொடுமழுவேந்தலுஞ் செஞ்சடையும்
நாவணப்பாட்டு நள்ளாறுடைய
நம்பெருமானிது வென்கொல்சொல்லாய்

பூவணமேனி யிளையமாதர்
பொன்னுமணியுங் கொழித்தெடுத்த
தாவணைவீதிவி லாடுங்கூட
லாலவாயின்க ணமர்ந்தவாறே. (எ)

இலங்கையிராவணன் வெற்பெடுக்க
வெழில்விர லூன்றி யிசைவிரும்பி
நலங்கொளச்சேர்ந்த நள்ளாறுடைய
நம்பெருமானிது வென்கொல்சொல்லாய்
புலன்களைச்செற்றுப் பொறியைநீக்கிப்
புந்தியிலுநினைச் சந்திசெய்யும்
அலங்கனல்லார்க ளமருங்கூட
லாலவாயின் கணமர்ந்தவாறே. (அ)

பணியுடைமாலு மலரினோனும்
பன்றியும்வென்றிப் பறவையாயும்
நணுகலரிய நள்ளாறுடைய
நம்பெருமானிது வென்கொல்சொல்லாய்
மணியொலிசங்கொலி யோடுமற்றை
மாமுரசின்னொலி யொன்றுமோவா
தணிகிளர்வேந்தர் புகுதுங்கூட
லாலவாயின்க ணமர்ந்தவாறே. (௯)

தடுக்குடைக்கையருஞ் சாக்கியருஞ்
சாதியில்நீங்கிய வத்தவத்தர்
நடுக்குறநின்ற நள்ளாறுடைய
நம்பெருமானிது வென்கொல்சொல்லாய்

எடுக்கும்விழவு நந்நாள்விழவு
மிரும்பலியின்பின்னோ டெத்திசையும்
அடுக்கும்பெருமைசேர் மாடக்கூட
லாலவாயின்க ணமர்ந்தவாறே. (௧௦)

அன்புடையானை யரனைக்கூட
லாலவாய்மேவிய தென்கோலென்று
நன்பொனைநாதனை நள்ளாற்றனை
நயங்கொளப்போற்றி நலங்குலாவும்
பொன்புடைசூழ்தரு மாடக்காழிப்
பூசுரன்ஞானசம் பந்தன்சொன்ன
இன்புடைப்பாடல்கள் பத்தும்வல்லார்
இமையவரேத்த விருப்பர்தாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## 11. அக்கினியிலிட்ட

### பதிகம்.

திருநள்ளாறு.

பண் - பழந்தக்கராகம்.

பச்சைத்திருப்பதிகம்.

திருச்சிற்றம்பலம்.

போகமார்த்த பூண்முலையா டன்னோடும் பொன்னகலம்
பாகமார்த்த பைங்கண் வெள்ளேற்றண்ணல் பரமேட்டி
யாகமார்த்த தோலுடையன் கோவண வாடையின்மேல்
நாகமார்த்த நம்பெருமான் மேயது நள்ளாறே. (௧)

தோடுடைய காதுடையன்
　　றோலுடையன் றொலையாப்
பீடுடைய போர்விடையன்
　　பெண்ணுமோர்பா லுடையன்
ஏடுடைய மேலுலகோ
　　டேழ்கடலுஞ் சூழ்ந்த
நாடுடைய நம்பெருமான்
　　மேயது நள்ளாறே. (௨)

ஆன்முறையா லாற்றவெண்ணீ
　　றாடியணி யிழையோர்
பான்முறையால் வைத்தபாதம்
　　பத்தர்பணிந் தேத்த
மான்மறியும் வெண்மழுவுஞ்
　　சூலமும் பற்றியகை
நான்மறையா நம்பெருமான்
　　மேயது நள்ளாறே. (௩)

புல்கவல்ல வார்சடைமேற்
　　பூம்புனல் பெய்தயலே
மல்கவல்ல கொன்றைமாலை
　　மதியோ டுடன்சூடிப்
பல்கவல்ல தொண்டர்தம்பொற்
　　பாத நிழற்சேர
நல்கவல்ல நம்பெருமான்
　　மேயது நள்ளாறே. (௪)

ஏறுதாங்கி யூர்திபேணி
　　யேர்கொளிள மதியம்
ஆறுதாங்குஞ் சென்னிமேலோ
　　ராடரவஞ் சூடி

நீறுதாங்கி நூல்கிடந்த
மார்பினிரை கொன்றை
நாறுதாங்கு நம்பெருமான்
மேயது நள்ளாறே. (ரு)

திங்களுச்சி மேல்விளங்குந்
தேவனிமை யோர்கள்
எங்களுச்சி யெம்மிறைவ
னென்றடியே யிறைஞ்ச
தங்களுச்சி யால்வணங்குந்
தன்னடியார்கட் கெல்லா
நங்களுச்சி நம்பெருமான்
மேயது நள்ளாறே. (சு)

வெஞ்சுடர்த்தீ யங்கையேந்தி
விண்கொள் முழவதிர
வஞ்சிடத்தோ ராடல்பாடல்
பேணுவதன்றியும் போய்ச்
செஞ்சடைக்கோர் திங்கள்சூடித்
திகழ்தரு கண்டத்துள்ளே
நஞ்சடைத்த நம்பெருமான்
மேயது நள்ளாறே. (எ)

சிட்டமார்ந்த மும்மதிலும்
சிலைவரை தீயம்பினாற்
சுட்டுமாட்டிச் சுண்ணவெண்ணீ
றாடுவதன்றியும் போய்ப்
பட்டமார்ந்த சென்னிமேலோர்
பான்மதியஞ் சூடி
நட்டமாடு நம்பெருமான்
மேயது நள்ளாறே. (அ)

உண்ணலாகா நஞ்சுகண்டத்
துண்டேனே யொடுக்கி
யண்ணலாகா வண்ணநீழ
லாழல் போலுருவ
மெண்ணலாகா வுள்வினையென்
றெள்கவலித் திருவர்
நண்ணலாகா நம்பெருமான்
மேயது நள்ளாறே. (௯)

மாசுமெய்யர் மண்டைத்தேரர்
குண்டர் குணமிலிகள்
பேசும்பேச்சை மெய்யென்றெண்ணி
யந்நெறி செல்லன்மின்
மூசுவண்டார் கொன்றைசூடி
மும்மதிலும் முடனே
நாசஞ்செய்த நம்பெருமான்
மேயது நள்ளாறே. (௧௦)

தண்புனலும் வெண்பிறையுந்
தாங்கியதாழ் சடையன்
நண்புநல்லார் மல்குகாழி
ஞானசம்பந்த நல்ல
பண்புநள்ளா றேத்துபாடல்
பத்துமிவை வல்லார்
துன்புநீங்கி வானவரோ
டுலகிலுறை வாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் தருமபுரத்தில் தேவாரப்பதிகம் யாழிசையி னமைக்கப்படாத பெரு மையையுடைய தென்பதைத் திருவருளாலங் குள் ளார்க்குக் காண்பித்து அத்தலத்தை நீங்கித் திருநள் ளாற்றை யடைந்து திருக்கோயிலிற் பிரவேசித்து, சுவாமியைவணங்கி "போகமார்த்த பூண்முலையாள்,, என்னும் திருப்பதிகத்தை யாழ் நரம்பிலே இசை கூடும்படி பாடிமுடித்துப் புறத்தணைந்து, திருநீல கண்டப் பெரும்பாணரை நோக்கித் திருப்பதிகத்தை யாழிலிட்டு வாசிக்குமபடி பணித்து, தாந்திருத்தா ளங்கொண்டு பாடியருளினர். பெரும்பாணரத் திருப் பதிகவிசையை யாழிலிட்டு வாசித்தார். அது கேட் டுப்பிள்ளையார் திருவுள மகிழ்ந்தருளினர்.

பிள்ளையார் மதுரைமா நகரத்திலெழுந்தருளி யிரு ந்தபோது சமணர்கள் திருஞானசம்பந்தப் பிள்ளையா ருடைய சொல்வன்மையை அவர் திருநீற்றுப்பதிக மாகிய தமிழ்ப்பதிகத்தினலே பாண்டியராசன் வெப்பு நோயை நீக்கினமையால் அவருடன் தருக்கம்பேசி நாங் களவரை வெல்லுதல் கூடாதென அறிந்து மனவுறுதி கொண்டு அக்கினியினலுஞ் ஜலத்தினலும் வெல்ல வேண்டுமென்று தங்களுக்குள்ளே சிந்தித்தார்கள். பிள்ளையார் சமணர்களை நோக்கி, இனி உங்கள் சமயநூற்றுணிபைப் பேசுங்களென்று அருளிச்செய்ய, சமணர்கள் தருக்கம்பேசி வெல்ல வேண்டுவதில்லை; நாமிருபக்கத்தேமும் எங்கள் எங்கள் சமய உண்மை யையுள்ளபடி பிரத்தியக்ஷமாகக் காட்டி வெல்லுவோ மென்று ஒட்டினர்கள். அப்பொழுது பாண்டியராஜன் என்னுடைய வெப்புநோயை நீங்கள் ஒழித்திலீர்கள்

உங்களுக்கு என்னவாது என்று சொல்ல; சமணர்கள் உங்களுக்கு என்னவாது என்பதையே வினவாகக் கொண்டு, நாங்கள் இருபக்ஷத்தேமும் எங்களெங்கள் சமயக் கருத்தை ஏட்டிலே எழுதி அக்கினியில் இடுவோம், வேவப்பெறு தொழிந்தமையே வெற்றி என்றார்கள். அது கேட்டு அரசர் பேசத் தொடங்குமுன், பிள்ளையார், நீங்கள் சொல்லியது நன்று, அரசரெதிரே அப்படியே செய்வோம் வாருங்களென்று திருவாய் மலர்ந்தருளினர். பிள்ளையாருடைய ஆஞ்ஞையினலே பாண்டியர் சபைமுன்னே அக்கினி யமைக்கும்படி ஏவலாளர்களை ஏவ அவர்களும் அக்கினி யமைத்தார்கள். பிள்ளையார் சமீபத்தில் எழுந்தருளிவந்து, பரமசிவனே மெய்ப்பொருளென்று தாம் பாடியருளிய தமிழ்வேதத் திருமுறைபைத் தோத்திரஞ் செய்து, நம்முடைய சிவபெருமானே பரம்பொரு ளென்று சொல்லி வணங்கி, திருக்காத்தின லெடுத்துச் சிரசின் மேற்கொண்டு திருக்காப்பிட்ட கயிற்றை அவிழ்த்து அத்திருமுறையைத் தமது திருக்காத்தினல் மறிக்க திருநள்ளாற்றின் மேலதாகிய "போகமார்த்த பூண்முலையாள்" என்னுந் திருப்பதிகம் வந்து சேர்ந்தது. பிள்ளையார் அத்திருப் பதிகத்தையே விரும்பித், திருநள்ளாறரை வணங்கி அது எழுதப்பட்ட திருவேட்டைக் கழற்றித் திருக்காத்திலே கொண்டு, பரமசிவனே மெய்ப்பொருள் என்பதைச் சமஸ்தருக்கும் உணர்த்தும் பொருட்டு, இது அக்கினியிலிடப்படுமாயிற் பழுதில்லை இது சத்தியம்,, என்னுங் கருத்துடைய "தளிரிளவளரொளி" என்னுந் திருப்பதிகம் பாடி அங்குள்ளார்க ளெல்லாருங்காணச், சமணர்களுடைய சிந்தைவேவ அவ்வக்கினியிலே அவ்வேட்டை

யிட்டருளினார். இட்ட ஏட்டில் எழுதப்பட்ட திருப் பதிகம், பரஞானம், அபரஞானம் என்கின்ற இரு தனங்களையுடைய உமாதேவி பாகரும் அட்ட மூர்த்தி யுமாகிய பரமசிவனே பொருளென உடைமையால் மிகச்சுவாலிக்கின்ற அக்கினியிலே பச்சையாய் விளங் கிற்று. சமணர்கள் தங்கள் நூற்பொருளை யெழு திய ஏட்டை "இது உய்யுமோ" என்கின்ற கவலை யோடு, நடுங்கி நின்று அக்கினியி லிட்டார்கள். அது எரிக்கப்பட்டொழிந்தது. அது கண்டு பயத்தினாலே மனமயங்கி நின்றார்கள். திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் தாம் அக்கினியிலிட்ட ஏட்டைக் குறித்த நாழி கையிலே ஈனமின்மை கண்டு யாவரும் வியக்கும்படி எடுத்தருளினார். அது முன்னையிலும் பசுமையும் புதுமையும் உடைத்தாய் விளங்கிற்று. பிள்ளையார் அவ் வேட்டைச் சபைமுன்னே காட்டித் திருமுறையிலே கோத்தருளினார். அரசர் அத்தியந்த ஆச்சரியமடைந் து சமணர்களை நோக்கி, "நீங்கள் இட்ட ஏட்டைக் காட்டுங்கள்,, என்றார். சமணர்கள் இட்ட ஏட்டை எடுக்கும்படி போய்ச் சேரும்போது அக்கினி மிகச் சுவாலித் தெரிதலைக் கண்டு திரும்பி விட்டார்கள். அதுகண்டு அரசர் ஜலத்தினால் அக்கினியைத் தணிப் பித்தார். சமணர்கள் அங்கே சாம்பருங் கரியுமன்றி மற்றொன்றுங் காணாராகி, செய்வதொன்றறியாது, தி கைப்பினாலே, திரண்ட சாம்பரைக் கையினாலே பிசை ந்து தூற்றிப் பார்த்தார்கள். அது கண்ட அரசர் புன்முறுவல் செய்து ஏட்டை இன்னும் அரித்துப் பாருங்கள். பொய்ந் நெறியையே மெய்ந் நெறியாகக் கொண்டு உலைகின்றவர்களே! போங்கள். முன் நான் வெப்பாகிய தீயினின்றும் உய்ய, நீங்கள் அப்பொழு

து தோற்றீர்கள். ஆதலால் அதுவே வழியாக இப்பொழுது அக்கினியில் இடப்பட்ட ஏடு உய்ந்ததில்லையென்றால் நீங்கள் தோற்றிலீர்கள் போலும், என்றார். இதுவே வாதில் அக்கினியிலிட்ட பதிகமாகும்.

திருநள்ளாறும், திருவாலவாயும் வினாவுரைப் பதிகம் இரண்டு தலத்துக்கும் பொதுவாதலாலும், "போகமார்த்த" என்னும் இப்பதிகம் திருநள்ளாற்றுப் பதிகமாயினும், அருளால் அக்கினியிலிட்டுப் பச்சையாக எடுத்த சம்பந்தம் நோக்கித் திருவாலவாய்ப் பதிகங்களோடு சேர்க்கப்பட்டன.

---

## 12. பதிகம்.

### மூன்றாந்திருமுறை.

திருவாலவாயிலிருந்து பாடியது.

திருநள்ளாறு.

திருவிராகம் - பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

தளிரிள வளரொளி தனதெழி
 றருதிகழ் மலைமகள்
குளிரிள வளரொளி வனமுலை
 யிணையவை குலவலி
னளிரிள வளரொளி மருவுநள்
 ளாறர்தந் நாமமே
மிளிரிள வளரெரி யிடிலிவை
 பழுதிலை மெய்ம்மையே. (க)

போதமர் தருபுரி குழலெழின்
மலைமகள் பூணணி
சீதம தணிதரு முகிழிள
வனமுலை செறிதலி
ஞதம தெழிலுரு வணையநன்
ளாறர்தந் நாமமே
மீதம தெரியினி விடிவினை
பழுதிலை மெய்மையே. (உ)

இட்டுறு மணியணி யினர்புணர்
வளரொளி யெழில்வடங்
கட்டுறு கதிரிள வனமுலை
யிணையொடு கலவலி
னட்டுறு செறிவயன் மருவுநள்
ளாறர்தந் நாமமே
யிட்டுறு மெரியினி விடிவினை
பழுதிலை மெய்மையே. (ங)

மைச்சணி வரியரி நயனிதொன்
மலைமகள் பயனுறு
கச்சணி கதிரிள வனமுலை
யவையொடு கலவலி
னச்சணி மிடறுடை யடிகணள்
ளாறர்தந் நாமமே
மெச்சணி யெரியினி விடிவினை
பழுதிலை மெய்மையே. (ச)

பண்ணியன் மலைமகள் கதிர்விடு
பருமணி யணிநிறக்
கண்ணியல் கலசம தன்முலை
யிணையொடு கலவலி
னண்ணிய குளிர்புனல் புகுதுநள்
ளாறர்தந் நாமமே
விண்ணிய லெரியினி விடிவினை
பழுதிலை மெய்ம்மையே. (௫)

போதுறு புரிகுழன் மலைமக
ளிளவளர் பொன்னணி
சூதுறு தளிர்நிற வனமுலை
யவையொடு துதைதவிற்
றூதுறு நிறமுடை யடிகணள்
ளாறர்தந் நாமமே
மீதுறு மெரியினி விடிவினை
பழுதிலை மெய்ம்மையே. (௬)

கார்மலி நெறிபுரி சுரிகுழன்
மலைமகள் கவினுறு
சீர்மலி தருமணி யணிமுலை
திகழ்வொடு செறிதலிற்
றூர்மலி நகுதலை யுடையநள்
ளாறர்தந் நாமமே
யேர்மலி யெரியினி விடிவினை
பழுதிலை மெய்ம்மையே. (௭)

மன்னிய வளரொளி மலைமக
டளிர்நிற மதமிகு
பொன்னியன் மணியணி கலசம
தனமுலை புணர்தலிற்
றன்னிய றசமுக னெரியநள்
ளாறர்தங் நாமமே
மின்னிய வெரியினி விடிலிவை
பழுதிலை மெய்ம்மையே. (அ)

கான்முக மயிலியன் மலைமகள்
கதிர்விடு கனமிகு
பான்முக மியல்பணை யிணைமுலை
துணையொடு பயிறலி
ஞான்முக னரியறி வரியநள்
ளாறர்தங் நாமமே
மேன்முக வெரியினி விடிலிவை
பழுதிலை மெய்ம்மையே. (கூ)

அத்திர நயனிதொன் மலைமகள்
பயனுறு மதிசயச்
சித்திர மணியணி திகழ்முலை
யிணையொடு செறிதலிற்
புத்தரொ டமணர்பொய் பெயருநள்
ளாறர்தங் நாமமே
மெய்த்திர ளெரியினி விடிலிவை
பழுதிலை மெய்ம்மையே. (கo)

சிற்றிடை யரிவைதன் வனமுலை
யிணையொடு செறிதரு
நற்றிற முறுகழு மலநகர்
ஞானசம் பந்தன்
கொற்றவ னெதிரிடை யெரியினி
லிடவிவை கூறிய
சொற்றெரி யொருபது மறிபவர்
துயரிலர் தூயரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

இது—சமணர்வாதின் பொருட்டுத் தீயிலிடுதற்கு போகமார்த்த பூண்முலையா ளென்னும் பதிகம் உதய மாக இது தீயில் பழுதுபடாது என்னுந் துணிவு கொண்டு, மதுரைமா நகரத்திலிருந்து திருநள்ளாறே சுவரைத் தியானித்து அருளிச்செய்த பதிகமாகும்.

---

## 13. பதிகம்.

### திருப்பாசுரம்.

பண்-கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே. (க)

அரிய காட்சிய ராய்த்தம தங்கைசேர்
எரிய ரேறுகந் தேறுவர் கண்டமும்
கரியர் காடுறை வாழ்க்கைப ராயினும்
பெரிய ராரறி வாரவர் பெற்றியே. (உ)

வெந்த சாம்பல் விரையெனப் பூசியே
தந்தை யாரொடு தாயிலர் தம்மையே
சிந்தி யாவெழு வார்வினை தீர்ப்பரால்
எந்தை யாரவ ரெவ்வகை யார்கொலோ. (௩)

ஆட்பா லவர்க்கருளும் வண்ணமு மாதிமாண்புங்
கேட்பான் புகி லளவில்லை கிளக்கவேண்டா
கோட்பா லனவும் வினையுங் குறுகாமையெந்தை
தாட்பால் வணங்கித் தலைநின்றிவை கேட்கதக்கார். (௪)

ஏதுக்க ளானு மெடுத்தமொழி யாலுமிக்குச்
சோதிக்க வேண்டா சுடர்விட்டுள னெங்கள்சோதி
மாதுக்க நீங்க லுறுவீர்மனம் பற்றிவாழ்மின்
சாதுக்கள் மிக்கீ ரிறையேவந்து சார்மின்களே. (௫)

ஆடும் மெனவு மருங்கூற்றமு தைத்துவேதம்
பாடும் மெனவும் புகழல்லது பாவநீங்கக்
கேடும் பிறப்பும் மறுக்கும்மெனக் கேட்டீராகில்
நாடுந் திறத்தார்க் கருளல்லது நாட்டலாமே. (௬)

கடிசேர்ந்த போது மலரானதைக் கொண்டுநல்ல
படிசேர்ந்த பால்கொண் டங்காட்டிடத் தாதைபண்டு
முடிசேர்ந்த காலை யறவெட்டிட முக்கண்மூர்த்தி
யடிசேர்ந்த வண்ண மறிவார்சொலக் கேட்டுமன்றே. (௭)

வேதம் முதல்வன் முதலாக விளங்கிவையம்
ஏதப் படாமே யுலகத்தவ ரேத்தல்செய்யப்
பூத முதல்வன் முதலே முதலாப்பொலிந்த
சூதன் ஒலிமாலை யென்றேகலிக் கோவைசொல்லே.

பாராழி வட்டம் பகையானலிந் தாட்டவாடிப்
பேராழி யான திடர்கண்டருள் செய்தல்பேணி
நீராழி விட்டேறி நெஞ்சிடங் கொண்டவர்க்குப்
பேராழி யீந்த புகழும் புகழுற்றதன்றே. (௯)

மாலா யவனும் மறைவல்ல நான்முகனும்
பாலாய தேவர் பகரில்லமு தூட்டல்பேணிக்
காலாய முந்நீர் கடைந்தார்க் கரிதாயெழுந்த
வாலால முண்டங் கமரார்க்கருள் செய்ததாமே. (௧0)

அற்றன்றி யந்தன்
மதுரைத்தொகை யாக்கினுந்
தெற்றென்று தெய்வந்
தெளியார்கரைக் கோலதெண்ணீர்ப்
பற்றின்றிப் பாங்கெதிர்
விரவும் பண்புநோக்கிப்
பெற்றென்று யர்த்த
பெருமான் பெருமானுமன்றே. (௧௧)

நல்லார்கள் சேர்புகலி
ஞானசம் பந்தனல்ல
வெல்லார்க ளும்பரவு
மீசனை யேத்துபாடல்

பல்லார்க ளும்மது...
பாசுரஞ் சொன்னபத்தும்
வல்லார்கள் வானோ-
ருலகாளவும் வல்லரன்றே. (கஉ)

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் மதுரைமாநகரத்தில் பாண்டியராச னரண்மனையில் எழுந்தருளியிருந்தபொழுது சமணர்கள் நாங்க ளிருபட்சத்தோரும் எங்கள் சமய உண்மையை எழுதிய ஏட்டை ஓடுகின்ற வைகையாற்றிலே யிடுவோம், எதிர்ந்து செல்லும் ஏடே மெய்ப்பொருளையுடையது என்று கூற, பிள்ளையார் அப்படியே செய்வோமென்று அருளிச்செய்தார். சமணர்கள் "அத்திநாத்தி" என்றெழுதிய ஏட்டை வைகையிலிட அது விரைந்து கடலைநோக்கி ஓடிற்று. அதுகண்டு திருஞானசம்பந்தப் பிள்ளையார் "வாழ்கஅந்தணர்" என்னுந் திருப்பாசுரத்தைப் பாடி ஏட்டிலெழுதி, அதை வைகையிலிட்டருளலும் அத் திருவேடு நதியிலே திரைகளுக் கெதிர்ந்து ஜலத்தைக் கிழித்துக்கொண்டு சென்றது. பரமசிவனே சராசரமாகிய எல்லாப் பொருளும் என வரையப்பட்ட திருவேட்டில் "வேந்தனு மோங்குக" என எழுதப் பட்டிருந்ததனால் பாண்டியராசனுடைய கூனும் நிமிர்ந்தது. சைவஸ்தாபனஞ் செய்து அரசனைக் கூன் நீக்கி நெடுந்திருமாறனாக்கிய பதிக மிதுவாகும்.

திருச்சிற்றம்பலம்.

## 14. பதிகம்.

### திருவாலவாய்.

### திருநாவுக்கரசு நாயனர் தேவாரம்.

### முதற்றிருமுறை.

திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

வேதியா வேத கீதர்
விண்ணவ ரண்ணு வென்றென்
ரோதியே மலர்க டூவி
யொருங்கிநின் கழல்கள் காணப்
பாதியோர் பெண்ணை வைத்தார்
படர்சடை மதியஞ் சூடும்
ஆதியே யால வாயி
லப்பனே யருள்செய் யாயே.

நம்பனே நான்மு கத்தாய்
நாதனே ஞான மூர்த்தி
யென்பொனே யீசா வென்றென்
றேத்திநா னேசற் றென்றும்
பின்பினே திரிந்து நாயேன்
பேர்த்தினிப் பிறவா வண்ணம்
அன்பனே யால வாயி
லப்பனே யருள்செய் யாயே.

ஒருமருந் தாகி யுள்ளா
யும்பரோ டுலகுக் கெல்லாம்
பெருமருந் தாகி நின்றாய்
பேரமு தின்சு வையாய்க்
கருமருந் தாகி யுள்ளா
யாளும்வல் வினைக டீர்க்கும்
அருமருந் தால வாயி
லப்பனே யருள்செய் யாயே.

செய்யநுன் கமல பாதஞ்
சேருமா தேவர் தேவே
மையணி கண்டத் தானே
மான்மறி மழுவொன் றேந்துஞ்
சைவனே சால ஞானங்
கற்றறி விலாத நாயேன்
ஐயனே யால வாயி
லப்பனே யருள்செய் யாயே.

வெண்டலை கையி லேந்தி
மிகவுமூர் பலிகொண் டென்று
முண்டது மில்லை சொல்லி
லுண்டது நஞ்சு தன்னைப்
பண்டுனை நினைய மாட்டாப்
பளகனே னுளம தார
அண்டனே யால வாயி
லப்பனே யருள்செய் யாயே.

ஏஞ்சலில் புகலி தென்றென்
றேத்திநா னேசற் றென்றும்
வஞ்சக மொன்று மின்றி
மலரடி காணும் வண்ணம்
நஞ்சினை மிடற்றில் வைத்த
நற்பொருட் பதமே நாயேற்
கஞ்சலென் றால வாயி
லப்பனே யருள்செய் யாயே.

வழுவிலா துன்னை வாழ்த்தி
வழிபடுந் தொண்ட னேனும்
செழுமலர்ப் பாதங் காணத்
தெண்டிசை நஞ்ச முண்ட
குழகனே கோல வில்லீ
கூத்தனே மாத்தா யுள்ள
அழகனே யால வாயி
லப்பனே யருள்செய் யாயே.

நறுமலர் நீருங் கொண்டு
நாடொறு மேத்தி வாழ்த்திச்
செறிவன சித்தம் வைத்துத்
திருவடி சேரும் வண்ணம்
மறிகடல் வண்ணன் பாகா
மாமறை யங்க மாறும்
அறிவனே யால வாயி
லப்பனே யருள்செய் யாயே.

நலந்திகழ் வாயி னூலாற்
சருகிலைப் பந்தர் செய்த
சிலந்தியை யரச தாள
வருளினை யென்று திண்ணங்
கலந்துடன் வந்து நின்றாள்
கருதிநான் காண்ப தாக
அலந்தன னால வாயி
லப்பனே யருள்செய் யாயே.

பொடிக்கொடு பூசிப் பொல்லாக்
குரம்பையிற் புந்தி யொன்றிப்
பிடிக்கநின் றாள்க ளென்றும்
பிதற்றிநா னிருக்க மாட்டே
னெடுப்பனென் றிலங்கைக் கோன்வந்
தெடுத்தலு மிருப துதோ
ளடர்த்தனே யால வாயி
லப்பனே யருள்செய் யாயே.

திருச்சிற்றம்பலம்.

---

## 15. பதிகம்.

### மூன்றாந்திருமுறை.

திருவாலவாய்த் திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

முளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி
முதிருஞ் சடைமுடிமேன் முகிழ்வெண் டிங்கள்
வளைத்தானை வல்லசுரர் புரங்கள் மூன்றும்
வரைசிலையா வாசுகிமா நாணுக் கோத்துத்

துளைத்தானைச் சுடுசரத்தாற் றுவள நீறுத்
தூமுத்த வெண்முறுவ லுமையோ டாடித்
திளைத்தானைத் தென்கூடற் றிருவால வாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றே னானே. (க)

விண்ணுலகின் மேலார்கண் மேலான் றன்னை
மேலாடு புரமூன்றும் பொடிசெய் தானைப்
பண்ணிலவு பைம்பொழில்சூழ் பழனத் தானைப்
பசும்பொன்னி நிறத்தானைப் பானீற் றானை
யுண்ணிலவு சடைக்கற்றைக் கங்கையாளைக்
கரந்துமையோ டுடனாகி யிருந்தான் றன்னைத்
தெண்ணிலவு தென்கூடற் றிருவால வாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றே னானே. (உ)

நீர்த்திரளை நீள்சடை மேனிறைவித் தானை
நிலமருவி நீரோடக் கண்டான் றன்னைப்
பாற்றிரளைப் பயின்றாட வல்லான் றன்னைப்
பதைத்தெழுந்த வெங்கூற்றைப் பாய்ந்தான் றன்னைக்
காற்றிரளாய் மேகத்தி னுள்ளே நின்று
கடுங்குரலா யிடிப்பானைக் கண்ணோர் நெற்றித்
தீத்திரளைத் தென்கூடற் றிருவால வாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றே னானே. (ங)

வானமிது வெல்லா முடையான் றன்னை
வரியரவக் கச்சானை வன்பேய் சூழக்
கானமதி னடமாட வல்லான் றன்னைக்
கடைக்கண்ணால் மங்கையுமை நோக்கா வென்மேல்

ஊனமது வெல்லா மொழித்தான் றன்னை
யுணர்வாகி யடியேன துள்ளே நின்ற
தேனமுதைத் தென்கூடற் றிருவால வாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றே னானே. (௪)

ஊரானை யுலகேழாய் நின்றான் றன்னை
ஒற்றைவெண் பிறையானை யுமையோ டென்றும்
பேரானைப் பிறர்க்கென்று மரியான் றன்னைப்
பிணக்காட்டில் நடமாடல் பேயோ டென்றும்
ஆரானை யமரர்களுக் கமுதீந் தானை
யருமறை யானான்முகனு மாலும் போற்றுஞ்
சீரானைத் தென்கூடற் றிருவால வாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றே னானே. (௫)

மூவனை மூர்த்தியை மூவாமேனி யுடையானை
மூவுலகுந் தானே யெங்கும்
பாவனைப் பாவமறுப் பான்றன்னைப்
படியெழுத லாகாத மங்கையோடு
மேவனை விண்ணோர் நடுங்கக் கண்டு
விரிகடலி னஞ்சுண் டமுதமீந்த
தேவனைத் தென்கூடற் றிருவால வாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றே னானே. (௬)

துறந்தார்க்குத் தூநெறியாய் நின்றான் றன்னைத்
துன்பந் துடைத்தாள வல்லான் றன்னை
யிறந்தார்க ளென்பே யணிந்தான் றன்னை
யெல்லிநட மாட வல்லான் றன்னை

மறந்தார் மதின்மூன்று மாய்த்தான் றன்னை
மற்றொருபற் றில்லா வடியார்க் கென்றுஞ்
சிறந்தானைத் தென்கூடற் றிருவால வாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றே னானே. (எ)

வாயானை மனத்தானை மனத்து ணின்ற
கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான் றன்னைத்
தூயானைத் தூவெள்ளை யேற்றான் றன்னைச்
சுடர்த்திங்கட் சடையானைத் தொடர்ந்து நின்றென்
றாயானைத் தவமாய தன்மை யானைத்
தலையாய தேவாதி தேவர்க் கென்றுஞ்
சேயானைத் தென்கூடற் றிருவால வாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றே னானே. (அ)

பகைச்சுடராய்ப் பாவ மறுப்பான் றன்னைப்
பழியிலியாய் நஞ்சமுண் டமிர்தீந்தானை
வகைச்சுடராய் வல்லசுரர் புரமட் டானை
வணையிலியா யெல்லார்க்குமருள்செய் வானை
மிகைச்சுடராய் விண்ணவர்கண் மேலப் பாலை
மேலாய தேவாதி தேவர்க் கென்றுந்
திகைச் சுடரைத் தென்கூடற் றிருவாலவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றே னானே. (கூ)

மலையானை மாமேரு மன்னினானை
வளர்புன் சடையானை வானோர் தங்கள்
தலையானை யென்றலையி னுச்சி யென்றுந்
தாபித் திருந்தானைத் தானே யெங்குந்

துலையாக வொருவரையு மில்லா தானைத்
 தோன்றாதார் மதில்மூன்றுந் தூளா வெய்த
சிலையானைத் தென்கூடற் றிருவால வாய்ச்
 சிவனடியே சிந்திக்கப் பெற்றே னானே. (௧௦)

தூர்த்தனைத் தோண்முடிபத் திறுத்தான் றன்னைத்
 தொன்னரம்பி னிசைகேட் டருள்செய் தானைப்
பார்த்தனைப் பணிகண்டு பரிந்தான் றன்னைப்
 பரிந்தவற்குப் பாசுபத மீந்தான் றன்னை
யாத்தனை யடியேனுக் கன்பன் றன்னை
 யளவிலாப் பல்லூழி கண்டு நின்ற
தீர்த்தனைத் தென்கூடற் றிருவால வாய்ச்
 சிவனடியே சிந்திக்கப் பெற்றே னானே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

ஈழ நாடு.

# திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.

## 1. பதிகம்.

## இரண்டாந்திருமுறை.

### திருக்கேதீச்சரம்.

பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

விருது குன்றமா மேருவி னாணரா
 வாவன லெரியம்பாற்
பொருத மூவெயில் செற்றவன் பற்றிநின்
 றுறைபதி யெந்நாளும்
கருது கின்றவூர் கனைகடற் கடிகமழ்
 பொழிலணி மாதோட்டங்
கருதி நின்றகே தீச்சரங் கைதொழக்
 கடுவினை யடையாவே.

பாடல் வீணையர் பலபல சரிதைய
 ரெருதுகைத் தருநட்ட
மாடல் பேணுவ ரமரர்கள் வேண்டநஞ்
 சுண்டிருள் கண்டத்த
ரீட மாவது விருங்கடற் கரையினி
 லெழிறிகழ் மாதோட்டங்
கேடி லாதகே தீச்சரந் தொழுதெழக்
 கெடுமிடர் வினைதானே.

பெண்ணோர் பாகத்தர் பிறைதவழ் சடையின
ரறைகழல் சிலம்பார்க்கச்
சுண்ண மாதரித் தாடுவர் பாடுவ
ரகந்தொறு மிடுபிச்சைக்
குண்ண லாவதோ ரிச்சையி னுழல்பவ
ருயர்தரு மாதோட்டத்
தண்ண னண்ணுகே தீச்சர மடைபவர்க்
கருவினை யடையாவே.

பொடிகொண் மேனியர் புலியத ளரையினர்
விரிதரு கரத்தேந்தும்
வடிகொண் மூவிலை வேலினர் நூலினர்
மறிகடன் மாதோட்டத்
தடிக ளாதரித் திருந்தகே தீச்சரம்
பரிந்தசிந் தையராகி
முடிகள் சாய்த்தடி பேணவல் லார்தம்மேன்
மொய்த்தெழும் வினைபோமே.

நல்ல ராற்றவு ஞானநன் குடையர்தம்
மடைந்தவர்க் கருளீய
வல்லர் பார்மிசை வான்பிறப் பிறப்பிலர்
மலிகடன் மாதோட்டத்
தெல்லை யில்புக ழெந்தைகே தீச்சர
மிராப்பக னினைந்தேத்தி
யல்ல லாசறுத் தரனடி யிணைதொழு
மன்பரா மடியாரே.

பேழை வார்சடைப் பெருந்திரு மகடனைப்
பொருந்தவைத் தொருபாக
மாழை யங்கயற் கண்ணிபா லருளிய
பொருளினர் குடிவாழ்க்கை
வாழை யம்பொழின் மந்திகள் களிப்புற
மருவிய மாதோட்டக்
கேழல் வெண்மருப் பணிந்தநீண் மார்பர்கே
தீச்சரம் பிரியாரே.

பண்டு நால்வருக் கறமுரைத் தருளிப்பல்
லுலகினி லுயிர்வாழ்க்கை
கண்ட நாதனார் கடலிடங் கைதொழக்
காதலித் துறைகோயில்
வண்டு பண்செயு மாமலர்ப் பொழில்மஞ்ஞை
நடமிடு மாதோட்டந்
தொண்டர் நாடொறுந் துதிசெய வருள்செய்கே
தீச்சர மதுதானே.

தென்னி லங்கையர் குலபதி மலைநலிந்
தெடுத்தவன் முடிதிண்டோ
டன்ன லங்கெட வடர்த்தவற் கருள்செய்த
தலைவனார் கடல்வாயப்
பொன்னி லங்கிய முத்துமா மணிகளும்
பொருந்திய மாதோட்டத்
துன்னி யன்பொடு மடியவ ரிறைஞ்சுகே
தீச்சரத் துள்ளாரே.

பூவு ளானுமப் பொருகடல் வண்ணனும்
புவியிடந் தெழுந்தோடி
மேவி னாடிநுன் னடியிணை காண்கிலா
வித்தக மென்னாகு
மாவும் பூகமுங் கதலியு நெருங்குமா
தோட்டநன் னகர்மன்னித்
தேவி தன்னொடுந் திருந்துகே தீச்சரத்
திருந்தவெம் பெருமானே.

புத்த ராய்ச்சில புனைதுகி லுடையவர்
புறனுரைச் சமணாத
ரெத்த ராகிநின் றுண்பவ ரியம்பிய
வேழைமை கேளேன்மின்
மத்த யானையை மறுகிட வுரிசெய்து
போர்த்தவர் மாதோட்டத்
தத்தர் மன்னுபா லாவியின் கரையிற்கே
தீச்சர மடைமின்னே.

மாடெ லாமண முரசெனக் கடலின
தொலிகவர் மாதோட்டத்
தாட லேறுடை யண்ணல்கே தீச்சரத்
தடிகளை யணிகாழி
நாடு ளார்க்கிறை ஞானசம் பந்தன்சொ
னவின்றெழு பாமாலை
பாட லாயின பாடுமின் பத்தர்கள்
பரகதி பெறலாமே.

திருச்சிற்றம்பலம்.

---

# ஏழாந்திருமுறை.

## சுந்தரமூர்த்திநாயனர்.

### திருக்கேதீச்சரம். பண்-நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

நத்தார்படை ஞானன்பசு வேறிந்நனை கவிழ்வாய்
மத்தம்மத யானையுரி போர்த்தமண வாளன்
பத்தாகிய தொண்டர்தொழு பாலாவியின் கரைமேற்
செத்தாரெலும் பணிவான்றிருக் கேதீச்சரத் தானே.

சுடுவார்பொடி நீறுநல்ல துண்டப்பிறைக் கீளுங்
கடமார்களி யானையுரி யணிந்தகறைக் கண்டன்
படவேரிடை மடவாளொடு பாலாவியின் கரைமேற்
றிடமாவுறை கின்றான்றிருக் கேதீச்சரத் தானே.

அங்கம்மொழி யன்னாரவ ரமரர்தொழு தேத்த
வங்கம்மலி கின்றகடன் மாதோட்டநன் னகரிற்
பங்கஞ்செய்த பிறைசூடினன் பாலாவியின் கரைமேற்
செங்கண்ணர வசைத்தான்றிருக் கேதீச்சரத் தானே.

கரியகறைக் கண்டனல்ல கண்மேலொரு கண்ணான்
வரியசிறை வண்டியாழ்செயு மாதோட்டநன் னகருட்
பரியதிரை யெறியாவரு பாலாவியின் கரைமேற்
றெரியுமறை வல்லார்திருக் கேதீச்சரத் தானே.

அங்கத்துறு நோய்களடி யார்மேலொழித் தருளி
வங்கமலி கின்றகடன் மாதோட்டநன் னகரிற்
பங்கஞ்செய்த மடவாளொடு பாலாவியின் கரைமேற்
றெங்கம்பொழில் சூழ்ந்ததிருக் கேதீச்சரத் தானே.

வெய்யவினை யாயதடி யார்மேலொழித் தருளி
வையமலி கின்றகடன் மாதோட்டநன் னகரிற்
பையேரிடை மடவாளொடு பாலாவியின் கரைமேற்
செய்யசடை முடியார்திருக் கேதீச்சரத் தானே.

ஊனத்துறு நோய்களடி யார்மேலொழித் தருளி
வானத்துறு மலியுங்கடன் மாதோட்டநன் னகரிற்
பானத்துறு மொழியாளொடு பாலாவியின் கரைமே
லேனத்தெயி றணிந்தார்திருக் கேதீச்சரத் தானே.

அட்டன்னழ காகவரை தன்மேலர வார்த்து
மட்டுண்டுவண் டாடும்பொழின் மாதோட்டநன் னகரிற்
பட்டவரி நுதலாளொடு பாலாவியின் கரைமேற்
சிட்டனமை யாள்வான்றிருக் கேதீச்சரத் தானே.

மூவரென விருவரென முக்கண்ணுடை மூர்த்தி
மாவின்கனி தூங்கும்பொழின் மாதோட்டநன் னகரிற்
பாவம்வினை யறுப்பார்பயில் பாலாவியின் கரைமேற்
றேவனெனை யாள்வான்றிருக் கேதீச்சரத் தானே.

கறையார்கடல் சூழ்ந்தகழி மாதோட்டநன் னகருட்
சிறையார்பொழில் வண்டியாழ்செயுங் கேதீச்சரத் தானை
மறையார்புக ழூரனடித் தொண்டனுரை செய்த
குறையாத்தமிழ் பத்துஞ்சொலக் கூடாகொடு வினையே.

திருச்சிற்றம்பலம்.

---

# மூன்றாந்திருமுறை.

திருக்கோணமாமலை. பண் - புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

நிரைகழ லரவஞ் சிலம்பொலி யலம்பு
நிமலர்நீ றணிதிரு மேனி
வரைகெழு மகளோர் பாகமாப் புணர்ந்த
வடிவினர் கொடியணி விடையர்
கரைகெழு சந்துங் காரகிற் பிளவு
மளப்பருங் கனமணி வரன்றிக்
குரைகட லோத நித்திலங் கொழிக்குங்
கோணமா மலையமர்ந் தாரே. (க)

கடிதென வந்த கரிதனை யுரித்து
வவ்வுரி மேனிமேற் போர்ப்பர்
பிடியென நடையாள் பெய்வளை மடந்தை
பிறைநுத லவளொடு முடனாய்க்
கொடிதெனக் கதறுங் குரைகடல் சூழ்ந்து
கொள்ளமு னித்திலஞ் சுமந்து
குடிதனை நெருக்கிப் பெருக்கமாய்த் தோன்றுங்
கோணமா மலையமர்ந் தாரே. (உ)

பனித்திளந் திங்கட் பைந்தலை நாகம்
படர்சடை முடியிடை வைத்தார்
கனித்திளந் துவர்வாய்க் காரிகை பாக
மாகமுன் கலந்தவர் மதின்மேற்

றனித்தபே ருருவ விழுத்தழ னாகந்
தாங்கிய மேருவெஞ் சிலையாக்
குனித்ததோர் வில்லார் குரைகடல் சூழ்ந்த
கோணமா மலையமர்ந் தாரே. (௩)

பழித்திளங் கங்கை சடைமுடி வைத்துப்
பாங்குடை மதனனைப் பொடியா
விழித்தவன் றேவி வேண்டமுன் கொடுத்த
விமலனார் கமலமார் பாதர்
தெழித்துமுன் னரற்றுஞ் செழுங்கடற் றரளஞ்
செம்பொனு மிப்பியுஞ் சுமந்து
கொழித்துவன் றிரைகள் கரையிடை சேர்க்குங்
கோணமா மலையமர்ந் தாரே. (௪)

தாயினு நல்ல தலைவரென் றடியார்
தம்மடி போற்றிசைப் பார்கள்
வாயினு மனத்து மருவிநின் றகலா
மாண்பினர் காண்பல வேடர்
நோயிலும் பிணியுந் தொழிலர்பா னீங்கி
நுழைதரு நூலினர் ஞாலங்
கோயிலுஞ் சுனையுங் கடலுடன் சூழ்ந்த
கோணமா மலையமர்ந் தாரே. (௫)

பரிந்துநன் மனத்தால் வழிபடு மாணி
தன்னுயிர் மேல்வருங் கூற்றைத்
திரிந்திடா வண்ண முதைத்தவற் கருளுஞ்
செம்மையார் நம்மையா ளுடையார்

விரிந்துயர் மௌவன் மாதவி புன்னை
வேங்கைவண் செருந்திசெண் பகத்தின்
குருந்தொடு முல்லை கொடிவிடும் பொழில்சூழ்
கோணமா மலையமர்ந் தாரே. (௬)

எடுத்தவன் றருக்கை யிழித்தவர் விரலா
லேத்திட வாத்தமாம் பேறு
தொடுத்தவர் செல்வந் தோன்றிய பிறப்பு
மிறப்பறி யாதவர் வேள்வி
தடுத்தவர் வனப்பால் வைத்ததோர் கருணை
தன்னருட் பெருமையும் வாழ்வுங்
கொடுத்தவர் விரும்பும் பெரும்புக ழாளர்
கோணமா மலையமர்ந் தாரே. (௭)

அருவரா தொருகை வெண்டலை யேந்தி
யகந்தொறும் பலியுடன் புக்க
பெருவரா யுறையு நீர்மையர் சீர்மைப்
பெருங்கடல் வண்ணனும் பிரம
னிருவரு மறியா வண்ணமொள் ளெரியா
யுயர்ந்தவர் பெயர்ந்தநன் மாற்குங்
குருவராய் நின்றார் குரைகழல் வணங்கக்
கோணமா மலையமர்ந் தாரே. (௮)

நின்றுணுஞ் சமணு மிருந்துணுந் தேரு
நெறியலா தனபுறங் கூற
வென்றுநஞ் சுண்ணும் பரிசின ரொருபான்
மெல்லிய லொடுமுட னாகித்

துன்றுமொண் பவ்வ மவ்வலுஞ் சூழ்ந்து
தாழ்ந்துறு திரைபல மோதிக்
குன்றுமொண் கானல் வாசம்வந் துலவுங்
கோணமா மலையமர்ந் தாரே. (௯)

குற்றமி லாதார் குரைகடல் சூழ்ந்த
கோணமா மலையமர்ந் தாரைக்
கற்றுணர் கேள்விக் காழியர் பெருமான்
கருத்துடை ஞானசம் பந்த
னுற்றசெந் தமிழார் மாலையீ ரைந்து
முரைப்பவர் கேட்பவ ருயர்ந்தோர்
சுற்றமு மாகித் தொல்வினை யடையார்
தோன்றுவர் வானிடைப் பொலிந்தே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

உ

திருச்சிற்றம்பலம்.

# ஈழநாடு

# திருக்கோணாசலம், திருக்கேதீச்சரம்



பிரமாண்டத்தின் இடைநாடித் தானமாக விதந்து “மேருநடுநாடி மிக்கிடைபிங்கலை, கூருமிவ்வானி லிலங்கைக்குறியுறுஞ், சாருந்திலைவனம் தண்மாமலயத்தூ, டேறுஞ்சுழுனை யிவைசிவபூமியே” என யோகீஸ்வராராம் திருமூலநாயனாரும், “இலங்கைநேரிடைபோம்” என சந்தானாசாரியராம் உமாபதிசிவாசாரியரும் விதந்து எடுத்தோதியதும், மணிவாசகப்பெருமான் “ஆர்கலி சூழ்தென்னிலங்கை” எனத் திருவாசகத்திற் திருவாய்மலர்ந்தருளியதும், பல சிறப்புக்களையுடையதும், ஆதிசேடனும் வாயுதேவனும் தருக்குற்று மேருமலைச் சிகரத்தைக் காத்தலும் அழித்தலும் செய்வோமென ஒட்டி சேடன் காப்ப வாயுதேவன் அக்காவலைப் பொருட்படுத்தாது தன்வலியால் அடித்துப்பிடுங்கிய சிகர மூன்றி லொன்று வந்து தங்கப்பெற்றதும், நகுலேசம், திருக்கேதீச்சரம், திருக்கோணமலை, முன்னேஸ்வரம், நாகேஸ்வரம், தான்றோன்றீஸ்வரம் முதலாம் சிவஸ்தலங்களையும், அம்பிகை விநாயகர் திருவாலயங்களையும், மாவிட்டபுரம் நல்லூர் கதிர்காமம் முதலாம் குகஸ்தலங்களையும் தன்னகத்தடக்கியதும், இராவணன் பன்னாட் சிவலிங்கம் தாபித்துப் பூசிக்கப்பெற்றதும்,

அவன்றம்பி விபீஷணனால் பதினாயிரத்தின்மேற்பட்ட சிவலிங்கஸ்தாபனம் பற்பலவிடங்களிலமைக்கப்பெற்றதும், தல தீர்த்த மூர்த்தி விசேடங்களையுடையதும் ஈழம், இரத்தினத்துவீபம் எனப் பல நாமங்களையுடையதும், கல்வி செல்வங்களால் மேம்பட்டதும் ஆகிய இலங்காதேயத்தின் வடகீழ்ப்பாகத்தில், தட்சிணகைலாசம் என விதந்து கூறப்பட்ட சிறப்பையுடையதும், பதினோருருத்திரர்களும், ஒன்பது பிரமர்களும், விஷ்ணுவுமாகிய பதின்மரும் பூசித்துப் பலமடைந்த சிறப்பினையுடையதும், குளக்கோட்டுமகாராசன் சிவாலயப் பணி திருக்குளப்பணி செய்து நித்திய நைமித்திகங்களைச் செய்ததுமாய திருக்கோணசலமும், வடமேற் பாரிசத்தில் பாலாவிக்கரையில் சூரிய சந்திரர்களாலும் தேவர்களாலும் முனிவர்களாலும் பூசிக்கப்பட்டதும், கேதுவினாற் பூசிக்கப்பெற்றதுமாய திருக்கேதீச்சரமும் ஆகிய இரண்டு சிவஸ்தலங்களுக்கும் இராமேச்சுரத்துக்கும் இடையே சமுத்திரமிருத்தலின் தம்மடியார்கூட்டத்துடன் வருதற்குத் திருவுளங்கொள்ளாது திருவிராமேச்சுரத்திலிருந்து திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரும் சுந்தரமூர்த்திநாயனாரும் திருவாய்மலர்ந்த திருப்பதிகங்களாகும். ஒவ்வோர் தலசரிதங்களையும் தனித்தனி எழுதப்புகின் விரியுமெனக்கருதி விடுக்கப்பட்டது

தமிழ்வேதாசிரியர்கள் திருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

அருணகிரிநாதர் அருளிச்செய்த

# திருவாலவாய்த் திருப்புகழ்.

---

தனத்த தாத்தன தனதன தனதன
தனத்த தாத்தன தனதன தனதன
தனத்த தாத்தன தனதன தனதன—தனதனத்தனதான.

பழிப்பர் வாழ்த்துவர் சிலசில பெயர்தமை
யொருத்தர் வாய்ச்சுரு ளொருவர்கை யுதவுவர்
பணத்தை நோக்குவர் பிணமது தழுவுவ—ரளவளப் பதனாலே

படுக்கை வீட்டினு ளழுதழு தணைவர்பின்
னணைப்பர் கார்த்திகை வருகென வுறுபொருள் [யே
பறிப்பர் மாத்தையி லொருவிசை வருகென—வவரவர்க்குறவா

யழைப்ப ராஸ்திகள் கருதுவ ரொருவரை
முடிக்கி யோட்டுவ ரிழிதுடி யரிவைய
ரலட்டி னற்புணர் மயலெனு நரகமு—மிடையிடைப்புகாளு

மவத்த மாய்ச்சில படுகுழி தனில்விழும்
விபத்தை நீக்கியுன் னடியவ ருடனெனை [வாயே
யமர்த்தி யாட்கொள மனதினி லருள்செய்து—கதிதனைத்தரு

தழைத்த சாத்திர மறைபொரு ளறிவுள
குருக்கள் போற்செயல் தவநெறி யடைவொடு [ளே
தகப்ப னார்க்கொரு செவிதனி லுரைசெய்த—முருகவிக்ரமவே

சமத்தி னற்புகழ் சனகியை நலிவுசெய்
திருட்டி ராக்கத னுடலது துணிசெய்து
திருத்த யோத்தியில் வருபவ னரிதிரு—மருமகக் கனகோவே

செழித்த வெற்றனை யசுரர்க ளுடலது
பிளக்க வோச்சிய பிறகம ரர்கள்பதி
செலுத்தி யீட்டிய சுரர்பதி மகடனை—மணமதுற் றிடுவோனே

திறத்தின ழுற்பல சமணரை யெதிரெதிர்
கழுக்க ளேற்றிய புதுமையை யினிதொடு [ளே.
திருத்த மாய்ப்புகழ் மதுரையி லுறைதரு—மறுமுகப்பெருமா

---

தானதனதத்த தானதனதத்த தானதனதத்த—தனதான.

ஆனைமுகவற்கு நேரிளையசுத்த
வாறுமுகமுற்ற வடிகோனே

ஆதியானுக்கும் வேதமுதலுக்கு
மாரணமுரைத்த வடிவேலா

தானவர்குலத்தை வேல்கொடுதுணித்த
சாரசதுர்மிக்க திரடோளா

தாளிணைவழுத்த மேவினர்மனத்தில்
தாழ்வுகெடநித்த மருள்வோனே

வானெழுபுவிக்கு மாலுமயனுக்கும்
யாவரொருவற்கு மறியாத

மாமதுரையுற்று வாழுமொருசொக்கர்
வாமமயில்பெற்ற குமரேசா

தேனெழுபுனத்தில் மான்விழிகுறத்தி
சேரமகிழ்வுற்ற திறன்மார்பா

தேவர்கள்கருத்தில் மேவியபயத்தை
தீரவிடுவித்த பெருமாளே.

---

தனனதன தானதத்த தனனதன தானதத்த
தனனதன தானதத்த—தனதான.

டையுடையி லேயரிக்கி
நெடியதெரு வீதிபுக்கு
நடனமிடுமாதரைப்போல் வருவாரை

ணுகிமய லேவிளைத்து
முலையைவிலை கூறிவிற்று
நயனமுட னேபசப்பி யுறவாடி

டிவுதிசம் வீடுபுக்கு
மலரணையின் மீதிருத்தி
மதனனுடை காவியத்தை யடைவாக

நவியுள மேயுருக்கி
நிதியுளதெ லாம்பறிக்கும்
வனிதையர்க ளாசைபற்றி யுழல்வேனோ

டையர்மனை தோறுநித்த
முறிதயிர்நெய் பால்குடிக்க
விருகையுற வேபிடித்து வுரலோடே

றகிடவே தோள்கள்கட்டி
யடிபடுகோ பாலகிருஷ்ண
னெழின்மருக னேகுறத்தி மணவாளா

டலெழுதி யேமிகுத்து
வருபுனலி லேறவிட்ட
வரியதமிழ் வாதுவெற்றி கொளும்வேலா

மணர்குலம் வேரறுத்து
மதுரைநகர் வாழவைத்த
வறுமுகவ வீரமுற்ற பெருமானே.

தாதந்த தாதத்தந்—தனதான.

நீலங்கொண் மேகத்தின்
நீவந்த வாழ்வைக்கண்

மாலென்று பேதைக்கும்
மார்தங்கு தாரைத்தந்

வேல்கொண்டு வேலைக்குன்
வீரங்கொள் சூரர்க்குங்

நாலங்க வேதத்தின்
நானென்று மார்தட்டும்

---

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 4 | றுருவவோங்குமே | றுருவமோங்குமே |
| 4 | 21 | பீலிபிஞலே | பீலியிஞலே |
| 6 | 11 | யொத்தொவ்வாமை | ஒத்தொவ்வாமை |
| 8 | 4 | குண்டிகைப் | குண்டிகை |
| 9 | 3 | சொக்கனென்னுளிருக்கலே | சொக்கனென்னுளிருக்கவே |
| 10 | 22 | கையிலுண்டுழலும் மமண் | கையிலுண்டுழலு மமண் |
| 11 | 13 | மறியாய்நெறி | மறியாநெறி |
| 12 | 9 | திருச்சிற்றம்பபலம் | திருச்சிற்றம்பலம் |
| 12 | 19 | ளாலவாய் | ளாலவாய்ச் |
| 15 | 7 | விழுமியார்களின் கழல் | விழுமியார்க ணின் கழல் |
| 15 | 22 | சதுரநீர் | சதுரநீ |
| 16 | 5 | பொன்றையங் | பொன்றயங் |
| 16 | 8 | நின்றயங்கியாடுவாய் | நின்றயங்கியாடலே |
| 16 | 14 | றுறையிலங்கு | றுறையிலங்கை |
| 16 | 19 | திசைம்முகனு | திசைமுகனு |
| 17 | 2 | பாயவேள்வி | பாயகேள்வி |
| 17 | 24 | புகழேநிற்க | புகழேமிக |
| 18 | 20 | சித்தைசெய்யா | சிந்தைசெய்யா |
| 18 | 21 | சிந்தைவாது | சிந்தவாது |
| 21 | 8 | வாலகல்வாயிலே | வாலநல்வாயிலே |
| 22 | 9 | தக்கபூமணைச் | தக்கபூமனைச் |
| 23 | 4 | னுய்ததுமெய்கொலோ | னுய்த்ததுமெய்கொலோ |
| 23 | 7 | துங்ககத்றழ | துங்கநற்றழ |
| 23 | 14 | சேர்வதுகோனையே | சேர்வதுகானையே |
| 26 | 15 | கியல்பாயஞ்செழுத் | கியல்பாமஞ்செழுத் |
|  | 20 | ளிருமது | ளிருபது |
|  | 21 | ஆணவங்கொண்ட | ஆவணங்கொண்ட |
|  | 7 | நாடொறு | நாடோறு |

## பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 27 | 11 | அண்டர்நாய்கன் | அண்டநாயகன் |
| 29 | 8 | நங்கள்மகிழு | நங்கண்மகிழு |
| 29 | 12 | அங்களகச்சுனை | அங்களகச்சுதை |
| 30 | 10 | வுலகத்தோடும் | வுலகத்தோரும் |
| 30 | 11 | ணீடுங்கூட | னீடுங்கூட |
| 31 | 3 | தாவணவீதிவி | தாவணவீதியி |
| 31 | 18 | யொன்று | யென்று |
| 32 | 1 | விழவு நந்நாள்விழவு | விழவுந்நன்னாள்விழ |
| 32 | 8 | நயங்கொளப்போற்றி | நயம்பெறப்போற் |
| 35 | 24 | துன்புநீங்கி | உண்புநீங்கி |
| 44 | 3 | வாழ்க்கைப | வாழ்க்கைய |
| 44 | 17 | மெனவு | மெனவும் |
| 44 | 21 | மலரானதைக் | மலரானகைக் |
| 45 | 13 | அற்றன்றி யந்தன் | அற்றன்றியந்தண் |
| 45 | 14 | யாக்கிணுனுங் | யாக்கிணுனும் |
| 45 | 81 | விரவும்பண்புநோக்கிப் | விரவும்பண்புநோக்கிற் |
| 49 | 10 | தோண்டனேனும் | தொண்டனேனுன் |
| 49 | 12 | தெண்டிசை | தெண்டிரை |
| 49 | 18 | வரழ்த்திச் | வாழ்த்திச் |
| 51 | 16 | வெங்கூற்றைந் | வெங்கூற்றைப் |
| 52 | 13 | மூவாமேளி | மூவாமேனி |
| 52 | 15 | பாவமாறுற | பாவமறுப் |
| 54 | 6 | தொன்னரம்பினிசை | தொன்னரம்பினின்னிசை |
| 55 | 20 | ரீட | ஈட |
| 55 | 22 | தீச்சரங் | தீச்சரந் |
| 56 | 5 | லாவுதோ | லாவதோ |
| 57 | 17 | மலைநவிங் | மலைநவிந் |
| 61 | 2 |  | திருஞானசம்பந்த மூர்த்திநாயனார் |
| 61 | 14 | பிடியென | பிடியன |